ஸப்தகிரி

விலை ரூ. 1/-

ஜனவரி, 1988




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



காலாத்மா சர்வபூதாத்மா வேதாத்மா விஸ்வதோமுக:
ஜன்ம ம்ருத்யு ஜராவியாதி ஸம்ஸாரபயநாசன : |
பிரஹ்ம ஸ்வரூபம் உதயே மத்யானயீஹே து மஹேஸ்வர:
அஸ்தகாலே ஸ்வயம் விஷ்ணு. த்ரயீமூர்த்தி: திவாகர : |
ஏக சக்ர ரதோயஸ்ய,திவ்ய : கனக பூஷித :ஸோயம் பவது ந: |
ப்ரீத: பதம ஹஸதோ திவாகர : |
பத்ம ஹஸ்த : ப்த்ம ஜோதி : பரேசாய நமோ நம : |
அண்டயோனே மஹா ஸாக்ஷின ஆதித்யாய நமோ நம:
கமலாசன தேவேஸ பானு மூர்த்தே நமோ நம :
தர்ம மூர்த்தே தயாமூர்ததே தத்வ மூர்த்தே நமோ நம : |

*ஸூர்யன் கால வடிவன். ஸர்வ ப்ராணிகளிடமும் ஆத்மாவாக இருப்பவர். வேதஸ்வரூபி. எங்கும் முகமுள்ளவர். பிறப்பு இறப்பு கிழத்தன்மை நோய் ஸம்ஸார பயம் முதலியவைகளை நாஸம் செய்பவர். உதய காலத்தில் ப்ரும்ம ஸ்வரூபி. பகலில் மஹேஸ்வரன். ஸாயங்காலத்தில் விஷ்ணு. வேதஸ்வரூபி. பகலைச் செய்பவர். ஸ்வர்ணமயமான ஒரே சக்ரமுள்ள தேர் உடையவர். தாமரையைக் கையில் வைத்திருக்கும் அந்த ஸூர்யன் நம்மிடத்தில் அன்புள்ளவராக இருக்கட்டும். ஜ்யோதி ஸ்வரூபி யான பரமனுக்கு நமஸ்காரம். ப்ரும்மாண்டத்திற்குக் காரணமாயிருப்பவரும் பெரிய ஸாக்ஷியாயிருப்ப வருமான ஸூர்யனுக்கு நமஸ்காரம். தாமரையை ஆஸனமாக உடையவரும் தேவர்களுக்கு ஈசனுயு மிருக்கின்ற பானுமூர்த்திக்கு நமஸ்காரம். தர்ம மூர்த்தியாயும் தயா மூர்த்தியாயும் தத்வ மூர்த்தியாயு முள்ள ஸூர்யனுக்கு நமஸ்காரம்.*

ஜனவரி 1988

# ஸப்தகிரி

இதழ் 8 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில "பொஙகல் திருநாள்" சித்திரம.

2-வது திருபபதியில் புரநதர தாஸோதஸவம்.

3-வது திருமலைக்கு இநதியத துணைக குடியரசுத தலைவா டாகடர். சங்கா தயாள சாமா அவாகள் வருகை புரிநதபோது.

பினனட்டையில ஆநதிராவின 'சஙகராநதி' சிததிரம்.

திரு. சிஎச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளா,
தி.தி. தேவஸ்தான அசசகம,
திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

விநாடிகள் விழுங்கப்படுவதும், நாட்கள் நகருவதும், மாதங்கள் மறைவதும், ஆண்டுகள் ஆரம்பமாவதும் நம் கண் முன்னே நிகழ்ந்தாலும், அநநிகழ்பவன யாவும நம் கவனத்தைக் கவர்ந்தது இல்லை. ஆண்டு முடிவடையும்போதுதான் மற்றொரு ஆண்டின ஆரம்பம் நம்மைப் பெரிதும் கவர்கின்றது. ஆகவே ஒவ்வொரு ஆண்டின் முடிவும் முதலும்தான நம்மைப் பெரிதும் ஈர்க்கின்றது. வேலையில்லா இளைஞர்களுக்கும், பெண்ணைப் பெற்றவர்களுக்கும், ஓய்வு காலம அணுகும் ஊழியர்களுக்கும் ஒவ்வொரு ஆண்டின் இறுதியும் முதலும் 'பகீர்' எனும் உணர்வை ஏற படுததவே செய்கினறது. ஆனால் ஒரு சில நாட்களுக்கு இநநிலை நிலவிய பிறகு, அனைவரும் அவரவர்களுடைய பிரச்சனைகளில் கடந்த கால ஏமாற்றங்களை மறந்து, எதிர்காலத்தின் புதிய நம்பிக்கைகளுடனும், எதிர்பார்ப்புகளுடனுமஅடுத்த ஆண்டில் அடியெடுத்து வைக்கினறனர்.

இந்த ஆண்டுகளின ஆரம்பமே விசித்ரமானது. பொதுவாக ஒவ்வொரு நாட்டிலும், குறிப்பாக பாரதத்திலும் ஆண்டுகள் பலவேறு கால நிலைகளில ஆரம்பமாகின்றன. சூர்யன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றின் போக்கைக் கொண்டும், முக்கிய இந்துப் பண்டிகைகளைக் கொண்டும் ஆண்டின் ஆரம்பம் நிர்ணயிக்கப்படுகின்றன. ஆனால் ஆங்கிலேயரின் வருகைக்குப் பிறகு-அவர்களது ஆட்சிக்குப் பிறகு இந்துக்களின் வாழ்வில் ஜனவரி மாதத்து முதல் நாள் வருடத்தின் முதல் நாளாக—முக்கிய நாளாக ஏற்கப்பட்டு விட்டது என்றே கூறலாம.

ஆனால் ஒவ்வொரு இந்தியனுக்கும் அவரவர் உடமபே ஆலயமாகும்போது-அவரவர் மனமே இறைவனாகும் போது—ஒவ்வொரு நாளும் திருநாளாகும்போது—அந்நியரின் இந்தப் புது வருடத்தின் அணுகு முறை சிறிதும் இந்துக்களைப் பாதித்ததில்லை. இன்னும் கூறப்போனால் எதிர் நீச்சல் போட்டே வளர்ந்த சமயம் இந்து சமயம். எதிரியையும் அரவணைத்துப் போகும் பண்பு அச்சமயத்தின் இயற்கைச் சிறப்பாகும். இவ்வகையில் 'ஜனவரி முதல் நாள்' இந்து சமயத்திற்குப் பெரிதும் உதவியே செய்துள்ளது எனறே துணியலாம். பல்வேறு இந்துக் கோயில்களில், பல்வேறு காலங்களில் நடைபெறும் சமய திருவிழாக்களின்போது கூடும் பக்தர் கூட்டத்தினரைவிட, ஜனவரி முதல் நாளன்று கோயில்களில் கூடும் கூட்டத்தின் அளவே இதனை உறுதிப்படுத்தும். தேசிய விழாக்களான பிள்ளையார் சதுர்த்தியும், தீபாவளியும்கூட இன்று ஒரு குடும்ப விழாவாக மாறிவிட்ட நிலையில், ஆலயத்திற்குச் சென்று அண்ணலை வணங்கிடும் நாளான 'ஆண்டு ஆரம்ப நாள் விழா' இன்று மக்களிடையே பெரிதும இடம் பெற்றுவிட்டது என்றே கூறலாம். இவ்வாண்டும் கடந்த ஆண்டு போன்றே நல்லதாக அமைய வேண்டுமே என்றும், இவ்வாண்டாவது நன்றாக மலர வேண்டுமே என்றும் வேண்டும் மக்களின் நம்பிக்கைகளுக்குப் புத்துயிர் அளிக்கும் ஒரு திருநாளாக ஆண்டின ஒவ்வொரு முதல் நாளும் விளங்குகின்றது.

இவ்வகையில், ஒவ்வொரு ஆண்டின் முதல் நாளின்போதும், மற்றையக் கோயில்களைக் காட்டிலும், திருமலைக் கோயில் ஒரு தனிசிறப்புடன் விளங்குகின்றது. சமூகத்தின் எல்லாப் பிரிவினரும் இந்நாளன்று மணிக்கணக்கில் பனியில் குளித்து, வரிசையில் நின்று அக்கலியுக நாயகனின் திருமுக தரிசனம் பெற ஆயிரக்கணக்கில் திருமலைக்கு வருகை புரியும் பெருமை இத்திருமலைக்கே உரியது. இத்தகு சிறப்புமிகு நெடியோனின் கோயிலுக்கு வரும் பக்தர்கள் ஒருநாள் மகிழ்ச்சியுடன் மட்டும் சென்றால் போதாது. அம்மகிழ்ச்சி நாளும் நீடித்திட வேண்டுமாயின், சிந்தனைச் சிறக்க சீரிய நெறி அவர்களுள் உருவாக வேண்டும் என்பதே எங்கள் பேரவா.

கோயில் திருவிழாக்களையும், சமய விழாக்களையும் சற்றே விஞ்சிடும் இந்நாளின்போது நாம் சிந்தித்து அறிய வேண்டிய செய்தியும் ஒன்று உள்ளது. கடந்த கால நிறைகுறைகளை அறிந்து தெளியாமலேயே, வெறும் தரையிலேயே மாளிகைகளைக் கட்ட முயலுகின்றோம். இதனால் நிகழ்கால உழைப்பு வீணாவதற்கான வாய்ப்புக்கள் உள்ளது என்பதை அறியத் தவறுகின்றோம். விளைவு நம் வாழ்க்கையில் தவறுகளும், தப்புக்களுமே இறுதியில் மிஞ்சுகின்றன.

கருத்தின்றி, சிந்தனையின்றிக் கூடிவிட்டு கலைவதால் மட்டும் பயனேதும் இல்லை. அக்காலத்தில் கோயில்களில் இறைவழிபாடு மட்டும் அன்றி,சமூகப் பிரச்சனைகளின் தீர்வுகளும்,கல்வி மேம்பாடுகளும் நடைபெற்றன. ஆனால் அன்றாடம் பிரச்சனைகளில் மூழ்கிவிட்ட இன்றைய மனிதனுக்கு இன்று இக்கோயில்கள் எவ்வகையில் துணைபுரிகின்றன என்பது சிந்திக்கத் தக்கதே. ஆனால் அக்கோயில்களில் மக்களின் பிரச்சனைகள் ஆராயப்படாவிட்டாலும் கற்றவர்கள், அதனால் பயன் பெற்றவர்கள் தங்கள் அனுபவங்களையும், அறிவையும் இன்றைய இளைஞர்களுக்கு எவ்வகையில் பயன்படுத்தலாம் என்ற சிந்தனையுடனும், அத்தகு பெரியோர்களின் சான்றாண்மையினை எவ்வகையில் பெறலாம், பெற்று பயன் பெறலாம் என்று இளைஞர்கள் சீரிய பொறுப்புணர்ச்சியுடனும், இந்து சமயம் போதிக்காத அநாகரிகச் செயலான 'வரதட்சணை' எனும் கொடுஞ்சொல்லைத் தங்கள் வாழ்க்கையிலிருந்து எப்படிக் களைவது என்பதைச் சம்பந்தப்பட்டோர் நேர்மையுடனும் எண்ணி செயற்படுவார்களேயானால், அது இந்துக்களின் வாழ்க்கையினையும், அவ்வாழ்க்கையில் இரண்டறக் கலந்துவிட்ட இந்து சமயத்தின் பெருமையினையும் விளக்குவதோடு மட்டுமன்றி, அதுவே அச்சமயம் மேலும் தழைத்தோங்கிட வழிகோலும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# செய்திச் சுருக்கம்

புரந்தரதாஸோத்ஸவம்:

தி. தி. தேவஸ்தானம், தன்னுடைய தாஸ ஸாகித்ய திட்டத்தின் கீழ், திருப்பதியில் 18-12-87 முதல் மூன்று நாட்களுக்கு ஸ்ரீ புரந்தர தாஸர் திருவிழாவை வெகு விமர்சையாகக் கொண்டாடியது. இவ்விழா துவக்க நாள் நிகழ்ச்சிகள் 18-12-87 அன்று மாலை ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் இனிது துவங்கியது. விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெயசந்திரா அவர்கள் வரவேற்றார். பின்னர், தாஸ சாகித்ய திட்டத்தின் சிறப்பு அலுவலரான திரு. கே. அப்பன்னசார்யா அவர்கள் தம் துறையினர் ஆண்டறிக்கையினையும் மற்றும் புரந்தர தாஸர் பற்றியும் உரை ஆற்றினர். பின்னர் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. என்.ரமேஷ்குமார் அவர்கள், சாமான்யர்களும் புரிந்து கொள்ளும் வகையில் பாக்களைப் புனைந்த கன்னட நாட்டு மெய்யடியார்களை,குறிப்பாக புரந்தர தாஸரின் பெருமை, அவர்தம் பாடல் மொழி நடை, பொருள் நயம் ஆகியவற்றைப் புகழ்ந்தார். இவ்வடியார்களின் பாடல்கள் யாவும் அன்று முதல் இன்று வரை பொது மக்களின் ஆதரவினால் மட்டுமே இன்று நாட்டில் பரவலாகப் பாடப்பட்டு வருகின்றன என்றும் தம் உரையில் குறிப்பிட்டார். பின்னர் தி. தி. தே. பொதுஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் புரந்தரதாஸர் மற்றும் அன்னமாச்சார்யா பாடல்களின் மூலம் திருமலைப்பற்றிய செய்திகள் பல தெரிய வருகின்றன என்று குறிப்பிட்டு, தாஸர்களின் பாடல்களின் சிறப்பினை விளக்கிப் பேசினர்.

இறுதியில், புரந்தர தாஸர் பாடிய பாடல்களைக் கொண்ட ஒலி நாடாக்களை தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் வெளியிட்டார். தொடர்ந்து, புரந்தர தாஸர் பற்றி தெலுங்கில் எழுதிய இரண்டு நூல்களை, தி.தி.தே. இணை செயலாட்சித் தலைவர் அவர்கள் வெளியிட்டார். ஒலி நாடாக்களில் பதிவு செய்யப்பட்ட பாடல்களைப் பாடிய திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் மறறும் நூல்களை தெலுங்கில் மொழி பெயர்த்த திரு. வி. சூர்யநாராயணராவ்அவர்களுக்கு நினைவுக் கேடயங்கள் வழங்கப்பட்டு கௌரவிக்கப்பட்டனர்.

விழாவில் திரு. கே. அப்பன்னசார்யா அவர்கள் நன்றி நவின்றார். பின்னர் திரு. டி. கே. கோவிந்தராவ் மற்றும் திருமதி. ராதா ஜெயலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கசசேரி நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. இம் மூன்று நாள் விழா சம்பந்தப்பட்ட கன்னட தாஸர்கள் பற்றிய புகைப்படக் கண்காட்சி ஒன்று ஸ்ரீதியாகராஜ மண்டபத்தில் இணை செயலாட்சித் தலைவரவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

19-12-87 அன்று மாலை இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இந்நிகழ்ச்சிகளுக்கு, தி.தி.தே. இணை செயலாட்சித் தலைவர் தலைமை வகிக்க, சிறப்பு விருந்தினராக தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் டாக்டர். என். தேவநாதன் அவர்கள் பங்கேற்றார். தம் சிறப்புரையில், கன்னட தாஸர்களைப் போன்றே தமிழ்நாட்டில், வைணவம் தழைக்கச் செய்த ஆழ்வார்களின் அருமையும் பெருமையும் விளக்கிடும் வகையில், அவர்கள்தம் சம்பந்தப்பட்ட விழாவும் தேவை என்று குறிப்பிட்டார். தி. தி. தே. பொறுப்பான்மைக் குழு உறுப்பினர் திரு. ஐ. எல் என். சாஸ்திரி அவர்களும் இவ்விழாவில் பங்கேற்று, சமய உணர்வினை தம் எளிய பாக்கள் மூலம் பரப்பிய தாஸர்களின் பெருமையினை விளக்கிப் பேசினர். பின்னர் சென்னையைச் சார்ந்த திருமதி. சாருமதி ராமச்சந்திரன் அவர்கள் பாடிய பாடல்களைக் கொண்ட ஒலி நாடாக்களை வெளியிட்டார். டாக்டர். தேவநாதன் அவர்கள் 'பக்த புரந்தர தாஸர்' எனும் நாடக நூலினை வெளியிட்டார். விழா இறுதியில் திருச்சூர் திரு. ராமச்சந்திரன் மற்றும் சென்னை திருமதி. சாருமதி ராமச்சந்திரன் ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகளும், பெங்களூரைச் சேர்ந்த பிரபாத கலாவிதரு அவர்களின் ஹரிதாஸ வைபவம் என்னும் நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றன.

இறுதி நாளான 20-12-87 அன்று நடைபெற்ற விழா நிகழ்ச்சிகளுக்கு, ஆந்திர மாநில அரசு வருவாய் மற்றும் அறநிலைய கூடுதல் செயலர் திரு. ஜே. பாபுரெட்டி அவர்கள் தலைமை வகித்தார். தம் தலைமை உரையில், திரு. ரெட்டி அவர்கள் தாஸர்களின் பாடல்களில் பக்தி நெறி மட்டுமல்லாது, வாழ்க்கைப் பண்புக் கூறுகளும் மிளிர்ந்து உள்ளன என்று கூறினர். பின்னர், தாஸ சாகித்ய துறை பிரசுரித்த சமய நூல் ஒன்றினை, திரு. ரெட்டி அவர்கள் வெளியிட்டார். தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் சிறப்பு விருந்தினராக இவ்விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் இந்து சமய மேம்பாட்டிற்காக தி. தி. தே. மேற்கொண்டு வரும் திட்டங்களையும், முயற்சிகளையும் விளக்கிக் கூறினர். பின்னர், புரந்தரதாஸர் பாடல்களைக் கொண்ட ஒலி நாடாக்களை வெளியிட்டார். இவ்விழாவில் சிறப்பு பேச்சாளராக உரையாற்றிய பெங்களூர் அருள மல்லிகே பார்த்தசாரதி அவர்கள் தம் உரையில் தாஸர்கள் சமயத்திற்கு ஆற்றிய தொண்டினையும், அன்னமய்யாவும், புரந்தர தாஸரும் திருமலையான் மேல் கொண்ட பக்தி தீவிரத்தையும் பின்னர் தி. தி. தே. தாஸ சாகித்யத்துறை மேற்கொண்டு வரும உன்னதமான பணியினையும் விளக்கிப் பேசினர். இவ்விழாவின் போது 'அன்னமாச்சார்யா திட்ட'த்தின்சிறப்பு அலுவலர் திரு.மேடசானி மோகன் அவர்களும் பங்கேற்று உரையாற்றினர். பின்னர் பெங்களூர் வீணை மஹாராஜ் சுவாமிஜி பர்வதீகர் அவர்களின் 'தத்தாத்ரேய வீணை' நிகழ்ச்சியும், திரு. பிரபாத் கலாவிதரு வழங்கிய 'கிருஷ்ண வைஜயந்தி' நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றன. இம் மூன்று நாள் விழாவின் போது, தி. தி. தே. நூல் விற்பனை நிலையத்தின் மூலம் பல சமய நூல்கள் விற்பனை செய்யப்பட்டன.

# திருவரங்கனும் திருமழிசைப்பிரானும்

பாரத்துவாசன்

திருவரங்கன்—'ஏவல்லவெந்தைக்கிடம் தலையரங்கம்' என்று பூதத்தாழ்வாரும், 'துரங்கம் வாய்கீண்டுகந்தானது தொன்மையூர் அரங்கமே' என்று திருமங்கையாழ்வாரும் அருளிச் செய்தபடியே திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதிகளுள்ளே தலையானதும் தொன்மையானதுமான திருவரங்கமென்னும் திருப்பதியின்கண் எழுந்தருளியுள்ள பெருமாளாவர் இவர். இப்பெருமானொருவரே பதின்மா பாடும் பெருமாளாகப் பிரசித்தி பெற்றவர்.

திருமழிசைப் பிரான்—முதலாழ்வார் மூவர்க்குப் பின்பு நான்காமவராக அவதரித்த்வர் இவர். கண்ணபிரான் யதுகுலத்தில் பிறந்து ஆயர் குலத்தில் வளர்ந்ததுபோல, முனிவர் குலத்தில் பிறந்து பிரம்பன் குலத்தில் வளர்ந்தவர் இவ்வாழவாா. ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தைக் காப்பதற்காக எப்போதும் பிறமதங்களை மறுக்கவல்ல வாதங்களைச் செய்தும் அத்தகைய பிரபநதங்களை அருளிச் செய்தும் போநதவராகையாலே இவர் 'உறையிலிடாதவர்' (=பகைவரைத் தகர்ப்பதற்காக உருவின வாளை எப்போதும் உறையிலிடாதவர்) என்று பிரசித்தியடைந்தவர்.

இத்தகைய பெருமையுடைய இவ்வாழ்வார்க்குப் பெரிய பெருமாளெனப்படும் திருவரங்கநாதனிடமே ஈடுபாடு அதிகமென்னும் விஷயத்தை விளக்க எழுநதது இககட்டுரை.

இவ்வாழ்வாா அருளிய தொண்ணூற்ருறு பாசுரங்கள் கொணட நான்முகன் திருவந்தாதிககும நூற்றிருபது பாட்டுக்கள் அடங்கிய திருச்சந்த விருத்தத்திற்கும் வியாக்கியான சக்ரவர்த்தியாகிய பெரிய வாச்சான் பிள்ளை அருளிய உரையின் முனனுரையை முதலில் அனுபவிப்போம்.

பரமபதநாதனுகிய திருமால் உலகோரை உய்விக்க எண்ணி இவ்வாழ்வாரிடத்தில் இன்னருள புரிந்து மயர்வற மதிநலமருளி (=அறியாமை ஐயம் திரிபுணர்ச்சி முதலிய குற்றம் நீங்கும்படி உண்மையறிவையும் தன்னிடம் பக்தியையும் அருள் செய்து) தன்னுடைய திவ்யாத்ம சொரூபத்தையும் திவ்ய மங்களத் திருமேனியையும் இவையிரண்டின் நற்பணபுகளையும் திருவாபரண திவயாயுதவர்க்கத்தையும் இவற்றையெல்லாம் காட்டிலெறித்த நிலாவாகாமல அனுபவிக்கிற திருமகள் முதலான தேவிமார்களையும் இவாகளைச் சேவித்தே பசி தாகம் தீரபபெறும் நித்ய சூரிகளையும் முத்தி பெற்றவாகளையும் இவர்களின் அனுபவததை மேன்மேலும் வளரச் செய்யும் பரமபதத்தையும், இப்பூவுலகின் படைப்புக் காப்பழிப்புகளைத் தான் ஒரு விளையாட்டாகக் கொண்டுள்ளபடியையும் இவருடைய அறிவுக்கு இலக்காக்கிக் காட்டினுன். இவ்வாழ்வாரும் இவறறையெல்லாம் தமது மனத்தினுல் கணடு அனுபவித்துக் கொண்டிருந்தார். பின்பு தாம் அனுபவிப்பதுபோல் இவ்வுலகத்தவர் அனுபவியாமல் இருப்பதற்கு என்ன காரணமெனறு கண் திறந்து பார்த்தார். தாம் பரம்பொருளாகிய திருமாலிடத்து ஊன்றித்திருமாலிடம் பராமுகமாயிருப்பதை அறிநதார். அவர்களிடம் கருணை கொண்டு, வேதம் அதற்கு முரணபடாத யுக்திகள இவற்றைக கொணடு திருமாலே பரமபொருள் பிற தெயவமனைத்தும் அவரப் பொருள்கள் என்பதனை நான்முகன் திருவந்தாதியின் மூலம் அவர்களுக்கு உபதேசித்தார். திருமாலையனுபவிப்பதாகிய பயிர் விளைவதற்குத் தடையாகவுள்ள-பிற தெய்வங்களைப் பரம்பொருளாகக் கருதுதலென்னும் களையைக் களைந்தெறிநதாரென்றபடி. (இவர் அங்ஙனம் திருமாலின் பரம்பொருட்டன்மையை நிலை நாட்டிய விஷயம் நான்முகன் திருவந்தாதியில் காணக.)

இப்படி உபதேசித்த போதிலும் இவ்வுலகோர் தமது பாக்கியமில்லாமையினுல இவருபதேசத்தைக் கேளாமலிருக்க, இன்று திருந்தாவிடினும் என்ருவது இவர்கள் திருமாலருளால் திருந்தட்டுமென்று அவர்களை விட்டு விட்டு, நாம் இவர்களைப்போல் அல்லாமல் 'உலகுக்குக காரணனுய்ப் பரமபததிலுளள ஸர்வேசவரனே நாம்' அடைந்து அனுபவித்துத் தொண்டு செய்தறகு உரியவன' என்பதை அவனது திருவருளாலே அறியப் பெற்ருேம். அவனைத் தஞ்சமடைய வேணுமெனருல், ஐந்து நிலைகளில் பரமபதம் திருப்பாற்கடல் ஆகிய இரண்டிடங்களிலுள்ள எம்பெருமான்கள் வெகு தூரத்திலுள்ள்வர்களாகையாலும் இந்நான்கு நிலைகளும் நமக்குத் தஞசமடையத் தக்கவையல்ல. இங்ஙனம் பாக்கியமற்ற நம் போல்வாரும் இழக்க வேணடாதபடி, அர்ச்சகர்கள் இட்ட வழக்காய் நாம் செய்யும் குற்றங்களைப் பொறுப்பவனுய் வேண்டிற்றெல்லாம தருமவனுய் எழுந்தருளியிருககும் (பிம்பவடிவிலுள்ள) அர்சசாவதாரவெம்பெருமானே நாம் நினைத்த இவ்விடத்திலே இக்காலத்திலே நமது வெளிக்கண்களால் கண்டு பற்றத்தக்கவனென்று அர்ச்சாவதாரத்தின எளிமையை நினைத்து, வேருெரு உபாயமில்லாதவா இவவாச்சாவதாரத்தையே தஞ்சம் பற்றுந்தற்குரியவர் என்றும், இங்ஙனம் தஞசம் பற்றுதலும் - பிரபத்தியும் மோக்ஷோபாயமன்று, பின்னை

## சந்தாதாரர்களுக்கு . . . .

28-2-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

8 13 20 27 41 42 83 84 87 144 160 167 168 169 171 175 212 232 256 283 285 287 290 500 502 504 505 508 509 605 606 607 608 610 611 614 616 619 620 633 697 1140 முதல் 1143 1146 1147 1148 1150 1151 1154 1155 1170 1173 1174 1176 1178 முதல் 1182 1189 1190 1195 1205 1207 1210 1214 1217 முதல் 1220 1223 1225 1242 1249 1253 1254 1257 1265 1268 1269 1305 1310 1316 2570 முதல் 2573 2575 முதல் 2580 2582 2584 2585 முதல் 2595 2597 2598 2600 முதல் 2640 2643 2645 முதல் 2656 2741

யோவென்றால், மோக்ஷம்பெறுமவனுக்கு இருக்க வேண்டியதொரு தகுதி மாத்திரமே என்றும், அர்ச்சாவதார வெம்பெருமானுடைய கருணையே மோக்ஷமடைவிக்கும் உபாயமென்றும் அறுதியிட்டு அப்பெருமானையே தஞ்சமாகப்பற்றி அவன் முகங்காட்ட 'அவனையடைந்துவிட்டேன்-வீடுபெற்றேன்' என்று தமக்குக் கிடைத்த பெரும்பேற்றைத் (திருச்சந்த விருத்தத்தின் வாயிலாகத்) தெரிவிக்கிறார். (இதுதான் பெரியவாச்சான்பிள்ளையருளிய முன்னுரையின் சுருக்கமாகும்.)

இவ்வாழ்வார் தமது பிரபந்தங்களில் திருவரங்கம் அன்பில் திருப்போ நகர் திருக்குடந்தை கவித்தலம் திருக்கோட்டியூர் திருக்குறுங்குடி திருப்பாடகம் திருவூரகம் திருவெஃகா திருவெவ்வுள் திருவல்லிக்கேணி திருவேங்கடம் துவாரகை திருப்பாற்கடல் பரமபதம் என்ற பதினறு திருப்பதிகளை வருணித்திருக்கிறார். அவற்றுள் இறுதியிலுள்ள இரண்டும் நம் கண்ணுக்கு இலக்காகாதவை. மற்ற பதினன்கில் பல திருப்பதிகட்கு ஒன்று இரண்டு என்ற வகையிலும், திருக்குடந்தைக்கு ஆறும், திருவேங்கடத்திற்குப் பதினறும் திருவரங்கத்திற்குப் பதினறுமாகப் பாசுரங்கள் காண்கின்றன.

வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தனிடமும் குடந்தைமேய கோவலனிடமும் இவர்க்கு பக்தி மிகவுண்டென்பதும் அதனால்தான் அவர்களில் முதல்வன் இவர்பின் சென்று 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்றே பிரசித்தியடைந்தானென்பதும் பின்னவன் இவர் 'எழுந்திருந்து பேசு' என்ன எழுந்திருந்தானென்பதும் அவன் ஆழ்வார்க்கு முதலில் பிரசாதத்தை அமுது செய்வித்துத் தாம் பின்பு அமுது செய்து இப்படி தலைவன் அடிமை எனற உறவுக்கு மாறுட்டம் உண்டானதை உலகுக்குக் காட்டுவதற்காக பிரானென்னும் தனது பெயரை ஆழ்வாருக்குக் கொடுத்து அவரைத் திருமழிசைப் பிரானுக்கித் தான அவரது ஆழ்வாரென்ற பெயரைப் பெற்று ஆராவமுதாழ்வாரானுனென்பதும் பிரசித்தமானவையே.

திருவேங்கடமுடையானிடம் இவர் தமக்குண்டான ஈடுபாட்டினை, 'அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண இழைப்பன் திருக்கூடல் கூட' (நான் 39) என்றும், 'காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர ஓணவிழவி லொலியதிரப் பேணி வருவேங்கடவா' (நான் 41) என்றும் திருமலையப்பனைச் சேவிக்கத் தமக்குள்ள ஆசையை வெளியிட்டதனுலும், 'சென்று வணங்குமினே சேணுயர் வேங்கடத்தை' (நான் 42) 'குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே போம் குமரருள்ளீர் புரிந்து' (நான் 44) 'வேங்கடமடைந்த மாலபாதமே அடைந்து நாளுமுய்ம்மினே' (திருச் 81) என்று எல்லோரையும் திருமலைக்குச் சென்று தொழுமாறு உபதேசம் செய்ததனுலும் அறியலாகும்.

ஆயினும் இத்திருமழிசைப் பிரானுக்குத் திருவரங்கம் கோயில் கொண்ட அழகிய மணவாளன் திறத்திலுண்டான ஈடுபாட்டின் மிகுதி சொல்லுக்குள் அடங்காதது. நான்முகன் திருவந்தாதியைத்தொடங்கும் போதே 'பண்டு அரங்கம் மேயது- ஆரறிவார் - யானறிந்தவாறு' (3) என்று திருவரங்கத்தைக் குறித்துள்ளமையும், 'அவனென்னை யாளியரங்கத்து அரங்கில் அவனென்னை ஏய்தாமற் காப்பான்' (30) என்று தம்மை யாளும் அரங்கத்தவன் தம்மைப் பிறவியென்னும் மாமாயக் கூத்தாடப் பெறும் இவ்வுலகமாகிய நாடகவரங்கில் மறுபடியும் சேரவொட்டாமல் வீடு பேற்றினைத் தந்து காப்பான் என்று அப்பெருமானிடம் தமக்குள்ள நம்பிக்கையை வெளியிட்டமையும் பிறவும் கொண்டு இஃது அறியலாகிறது.

பிற சமய மறுப்பையே முக்கிய நோக்கமாகக் கொண்டு எழுநத நான முகன் திருவநதாதி ஒரு புறமிருக்கட்டும். அர்ச்சாவதாரத்தின் எளிமையைப் பேசுவதற்கென்றே இவரருளிய திருச்சந்தவிருத்தத்தில் திருவரங்கனின் பெருமையை இனிக் காண்போம். மற்ற திவ்யதேசத்தெம்பெருமான்களைப் பேசுவதற்கு முன்னமே 'அரங்கனே' (21) என்றழைப்பதும்,

இறுதியில் 'பொன்னி சூழரங்கம்மேய் பூவைவண்ண மாய கேள்' (119) என்று அப்பெருமானை விளித்து விண்ணப்பம் செய்வதும், இடையில் பல பாசுரங்களினால் அவன் பெருமை திருவரங்க மாநகரின் சிறப்பு முதலியவற்றை வருணிப்பதும் நோக்குவார்க்குத் திருச்சந்தவிருத்தம தலை சிறந்த அர்ச்சாவதாரமான அரங்கனைப்பற்றியே அருளிச் செய்யப் பட்டதென்னும் உண்மை புலனாகாமற் போகாது.

பல சொல்லிப் பயனென்னே? இவ்வாழ்வார் திருவரங்கநாதனையே வீடு பேற்றிற்கு உபாயமாகப் பற்றினாரென்பதும் அவன்தன் இன்னருளாலேயே வீடுபேறெய்தினாரென்பதும் இப்பிரபந்தத்திலேயே விளக்கமாக ஆழ்வார் தம்மாலே அருளிச் செய்யப் பட்டுள்ளது.

'காரொடொத்த மேனி நங்கள் கண்ண, சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமா(று)சொலே' (47) பரமபதம் பாற்கடல் முதலாக நீயிருக்குமிடங்களுக்கு எல்லையேயில்லை. அவ்விடங்களில் வந்து உன்னைத் தஞ்சம் பற்றத் தகுதியில்லாத நாயினேனுக்கு இதுதான் நாம் பற்றத் தக்கவிடமென்றறிந்து பற்றும்படி ஓரிடத்தை அருளிச் செய்ய வேணுமென்று ஆழ்வார் எம்பெருமானை வேண்ட, அப்பெருமான் திருவரங்கத்தைக் காட்டினானும் ஆழ்வாருக்கு. இவ்விஷயம் 'சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமா சொலே' என்ற இவர்க்கு இவரிருந்த பூமியிலே சக்ஷுர் விஷயமாய் (கண்ணுக்கிலக்காய்) அவதாரங்களிலுண்டான நீர்மைகளும் இழக்கவேண்டாதபடி குணபூர்த்தியோடே கோயிலிலே கண் வளர்ந்தருளுகிற ஸம்ருத்தியைக் (எளிமைச் செல்வத்தைக்) காட்டக் கண்டநுபவிக்கிறார்' என்று 49ம் பாசுரத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளும் முன்னுரையால் தெரியலாகும். இப்பாசுரம் தொடங்கி 55ம் பாசுரம் வரை திருவரங்கத்தின் நீர்வள முதலிய செல்வமும் திருவரங்கநாதனது அடியார்களைக் காக்கும் கருணை அவர்கள் பகைவரைத் தீர்க்கும் திறன் எளிமை முதலியன அனுபவிக்கப்படுகின்றன.

இவ்வாறு தாம் பற்றத்தக்க இடத்தை அனுபவித்த ஆழ்வார் 'புனிதா நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன் எம்மீசனே' (90) என்று அரங்கன் திருவடிகளையே பற்றினார். 'அடைக்கலம்புகுந்த என்னை அஞ்சலென்ன வேணுடமே' (92) என்று அடைக்கலம் புகுதலை வீடு பெறப்போகும் தமக்கு இருக்க வேண்டிய தகுதியாக அருளிச் செய்தார். பின்பு 'அரங்கவாணனே (நின்) பாதமே விரும்பி நின்றிறைஞ்சுவேற்கு இரங்கு' (93) என்று பகவானுடைய கருணையொன்றே-அதாவது கருணை புரியும் பகவானே மோக்ஷத்திற்கு உபாயமென்றார்.

'பொன்னி சூழரங்கம் மேய பூவை வண்ண மாய கேள்' (119) என்று தொடங்கி-என்னுடைய உயிரெனனும் வலியவினைத் திரட்சியில் ஆசையாகிய கொழுந்து, உனது பூவை வணணமுடைய திருமேனியழகினாலும் ஆச்சரியமான உனது நீர்மையினாலும் பிறந்து உனது தாமரை மலா போன்ற திருவடிகளை விட்டுப் பிரியாது நின்றது என்று அவன திருவடிகளில் தமககுப் பிறந்த பேரவாவினை அவ்விடமே விண்ணப்பம் செய்தார்.

முடிவில 'இயக்கறுத' (120) என்று தொடங்கும் இறுதிப் பாசுரத்தில் - நான் இங்ஙனம் அவனைத் தஞ்சமாகப் பற்றியதும் சுதந்திரனாக அன்று; மேகவண்ணனாகிய திருவரஙகன் இடைவிடாத பல பிறப்புக்களினின்றும் என்னை விடுவிக்க நினைத்து இன்று ஒரு காரணமுமின்றி நானிருந்த இடத்திற்குத் தானே வந்து கிட்டி, உயிராகிய தன்னிடத்திலே உடலாக நிலைத்திருக்கிற எனது உள்ளத்தில் தனது திவ்விய திருமேனியைப் பிரிக்க முடியாதபடி வைத்து எனனோடு கலந்து பற்றச் செய்யவே நான் அவனுக்குப் பர தநதிரனாக அவனருளாலேயே அவனைப் பற்றினேன். அதனால் என்னுடைய உயிர் - அறியாமையும் தீவினையும் பிறப்புமாயே இயங்கிச் செல்கின்ற ஸம்ஸார வாழ்க்கையை அறுத்து இடையறாத ஆனந்த மயமான கைங்கர்யமெனனும் வீடுபேற்றினை அடைந்துவிட்டது எனறு தாம் பெற்ற பேற்றை அருளிச செய்து தலைக்கட்டியருளினார்

இங்ஙனம் இவ்வாழ்வாா தஞ்சமாகப் பற்றியதும் திருவரங்கனையே. மோக்ஷமடைந்ததும் அப்பெருமானது இனனருளாலேயே என்னும் மிக முக்கியமான விஷயம் அறியப்படுதலால் இவர்க்குத திருவரஙகநாதனிடம் உணடான ஈடுபாடு ஈடுமெடுப்பும் இலலாததெனபது அசைகக முடியாத தோர் உண்மையாகும. ★

---

## நல்வாழ்த்துக்கள்

'ஸப்தகிரி' வாசகப் பெருமககளுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், ஆசிரியப் பெருமக்களுக்கும எங்களுடைய மனமார்ந்த புததாண்டு நல வாழ்த்துக்கள் பல உரிததாகுக.

ஆசிரியர்.

---

# ஸ்ரீவனதுர்க்கா பரமேஸ்வரி ஆலயம்

சிவபெருமான் வீரசாகஸம் புரிந்த எட்டுத் தலங்களில், காமனை எரித்து சிறப்பு பெற்ற இடமான 'திருக் கொருக்கை' முக்கியமானதாகும். தஞ்சை மாவட்டத்தில் மயிலாடு துறைக்கு அருகில் உளள இந்த ஊரில் காமனைத் தகனம் செய்த ஸ்ரீ வீரட்டேஸ்வரஸ்வாமி ஆலயம் உள்ளது. இவ்வாலயத்திலிருந்து ஒரு பர்லாங்கு தொலைவில் காமனை எரித்த இடம் உள்ளது. அந்த இடம் 'விபூதிக்கட்டை' என்று அழைக்கப்படுகிறது. அந்த குட்டையின் நடுவில் மணல் விபூதி போன்று வெண்மையாக உள்ளது.

இந்த ஊர் குறுங்கை, கொருக்கை, கொற்கை எனப் பலவாறு அழைக்கப்படுகிறது. இந்த ஊரில் காம தகன மூர்த்தி ஆலயத்திற்கு நிருதி பாதத்தில் நவதுர்க்கையில் ஒன்றான ஸ்ரீவன துர்க்கை லெக்ஷ்மி அம்சமாக காட்சி அளித்து அருள் பாலிக்கும் கோயில் உள்ளது. ஆலயத்தின் வாயிலில் ஒரு புறம் சண்டி மற்றும் நாகர் உருவமும், மறுபுறம் முண்டி மற்றும் இந்திராணி உருவமும் உள்ளன. பிரகாரத்தில் விநாயகர் சன்னதி உள்ளது. லெக்ஷ்மி அம்சமாக காட்சி அளிக்கும ஸ்ரீவன துர்க்கா பரமேஸ்வரி தலை, இடுப்பு, மறறும் இடதுகால் சாயவாக ஈசானய மூலையைப் பார்த்தவண்ணம் இருக்கிறாள். சன்னதி கிழக்கு நோக்கி உள்ளது. திருபங்கமாக காட்சியளிக்கும அம்பாளின எட்டு புஜங்களில முறையே சங்கு, சக்கரம், கத்தி, கபாலம், மணி, சூலம, அபய ஹஸ்தம் மற்றும் வரத ஹஸ்தமுடன் கொண்டு மகிஷாசுரனை வதம் செய்வது போன்ற வடிவில் தேவி காட்சி தருகிறாள். இந்த தேவி விஷ்ணு துர்க்கையாக விளஙகுவதால் துளசி பிரசாதம் பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது.

இக்கோயிலின் சிவாச்சாரிடம் ஸ்ரீ வனதுர்க்கா பரமேஸ்வரியைப் பற்றி கேட்டபோது, "அம்பாளுக்கு கடுகு மிளகாய் தாளித்த நிவேதனம் செய்யக் கூடாது. மேள சத்தம், உரல் உலக்கை சத்தம் கேட்கக் கூடாது. ஆனால் பம்பை, உடுக்கை, சங்கு, எக்காளம் முதலியன அம்பாளுக்குப் பிரியமான வாத்யங்கள்" என்று விளக்கிக் கூறினார். ஒவ்வொரு வருடமும் ஆவணிமாதம் உத்திர நட்சத்திரத்தில் அம்பாளுக்குச் சிறப்பு அர்ச்சனை நடைபெற்று வருகிறது. தினமும் இரண்டு காலபூஜை நடைபெற்று வருகிறது.

நாற்பத்து எட்டு நாட்கள் தொடர்ந்து பூஜைசெய்து வந்த ஒரு ஊமைப் பெண், ஸ்ரீ வனதுர்க்கையின் அருளினால் பேசத் தொடங்கிய நிகழச்சி நிகழ்நதுளளது. தொடர்சசியாக ஒன்பது ஞாயிறறுக் கிழமைகளில் இராகுகால நேரத்தில் துர்கையை அம்மனை பூஜித்து வந்தால் நினைத்த காரியங்கள் வெற்றியடையும். இது போலவே ஒன்பது வெள்ளிக் கிழமைகளில் இராகுகால வேளைகளில் பூஜித்து வந்தால் திருமணம் நடப்பதாக பக்தர்கள் சொல்கிறார்கள். இதுபற்றி ஆலய சிவாச்சாரியாரிடம் கேட்டபோது, முதல் பூஜையின் போது அர்ச்சனைச் சாமான்களுடன் மூன்று மஞ்சள் கிழங்குகளைக் கொண்டு வர வேண்டும் எனறும் இரண்டை சன்னதியில் வைத்துவிட்டு ஒன்றைக் கொடுத்து விடுவார்களாம். நிறைய பக்தர்கள் இவ்வணணம செய்ததால் பலன் பெற்றதாகக் கூறுகின்றனர்.

திரு. உ. வெங்கடேசன், எம்.ஏ.,
வைததீஸ்வரன்கோயில்

பக்தியுடன வந்து வணங்கும் பக்தர்கள் மனோரதத்தை பூர்த்திசெய்து கண்கணட தெய்வமாக விளங்கும் ஸ்ரீவனதுர்க்கையை தினமும் மக்கள் பல இடங்களிலிருந்து வந்து வணங்கி இறையருள் பெற்றுச் செல்கின்றனர். வந்து வணங்கும் பக்தர்களின் துன்பங்களை நீக்கி வாழ்வில் அமைதி அளித்து வருவது ப்ரத்யட்சமாகத் தெரிகின்றது. திருக்கொருக்கையில் கோயிலகொணடு அருள் பாலிக்கும் அன்னை ஸ்ரீவனதுர்க்கா பரமேஸ்வரியை நாமும் பக்தியுடன் வணஙகி அருள் பெறுவோமாக!

"சாவ மங்கல மாங்கல்யே சிவே
சர்வார்தத சாதகே
சரண்யே த்ரயம்பகே கௌரி
நாராயணி நமோஸதுதே."



# திருப்பாவை உதயம்

(ஸ்ரீமந நாராயணனின் வராஹ வதார காலத்தில் பூமிப் பிராட்டி யின உள்ளத்தில் 'திருப்பாவை'யின் 'கரு' உருவாகியது. ஸ்ரீ கிருஷ்ணு வதாரத்திற்குப்பின், கலியுகத்தில், ஸ்ரீ ஆண்டாளின் திருமுக மணடலத் திலிருந்து அது, வேதமனைத்திற்கும் வித்தாக ஜனித்தது. தேசீய நல்லாசிரி யர் விருது பெற்ற இக்கட்டுரை யாளர், இது பற்றிய விவரத்தை, இககட்டுரையில் விளக்குகிறுர் (ஆ-ர்)

ஸ்ரீமந நாராயணனின் திவ்ய மஹிஷி பூமிப் பிராட்டி, கலியில் கோதை நாச்சியாராக அவ தரித்து 'திருப்பாவை' எனகிற அற் புதமான பாசுரங்களை உலகிற்கு அளித்தாள். 'வேதமனைத்திற்கும் வித்து', என இநதத் திருப்பாவை பின்னேரால் பாராட்டப்பட்டது. வேத புருஷனுகிய எம்பெருமானின் பிராட்டியாகிய இவளது பாசுரங்கள் வேத மனைத்திற்கும் வித்தாக இருப் பதில் வியப்பில்லை. இநத வித்து யாரால் எப்பொழுது ஊன்றப்பட் டது? என்பது ஒரு சுவைமிக்க நிகழ்ச்சியாகும். ஸ்ரீ வராஹாவதார கார்யம் முடிநத ஸமயம். பிரளய ஜலத்திற்குள் அமுங்கி இருந்த பூமிப் பிராட்டியைத் தமது பராக்ரமத்தால் ஹிரண்யாக்ஷன் என்பவன் அடககி, வெளிவராமல் செய்திருந்தான். ஜகத் காரணபூதனுன ஸ்ரீமந் நாராயணன், வராஹவதார மெடுத்து, அவனுடன் போரிட்டுப் பூமிப் பிராட்டியை வெளியே கொண்டு வந்து உரிய இடத்தில் நிலை நிறுத்தினுர். 'ஸ்ரீ வராஹ புராணம்' இது பற்றி விரி வாக விளக்குகிறது. ஆழ்வார்களும், இந்த விசித்ரமான அவதாரத்தை வியந்து பலபடிகளில் பாடியுள்ளனர். திருமங்கை ஆழ்வார்,

"தீதறு திங்கள் பொங்கு சுடருமஉமபா
உலகேழினேடு முடனே
மாதிரமண சுமந்து வடகுன்ற நின்ற
மலையாறுமஏழுகடலும்
பாதமர்சூழ குளம்பின் கமண்டலததி
னெரு பாலொடுஙக வளாசேர்
ஆதிமுன் ஏனமாகி அரணுயமூாததி
அது நம்மை யாளுமரசே"

என்று பாடியுள்ளார்.

"உத்திருதாஸி வராஹேண"

என்று வேதமும் குறிப்பிடுகிறது

அந்த ஸமயம், ஹிரண்யாக்ஷனது தொல்லைகட்கு ஆளான பூமிப் பிராட் டியைத் தமது மடியில் அமரச்செய்து ஸ்ரீமந் நாராயணன் ஆறுதல் கூறி னுர். அப்பொழுது பூமிப் பிராட்டி, 'நாதா! எல்லோரும் நம் குழந்தை கள் தானே! சிலர் மட்டில் அரக்க குணத்துடன் தீங்கிழைக்கின்றுர்களே! அவர்களையும் நல்ல குணமுள்ளவர் களாக படைத்திருந்தால் இது போன்ற கொடிய நிகழ்ச்சிகள் ஏற் படாமல் இருக்குமல்லவா?' என்று கேட்டாள். அதற்கு ஸ்ரீமந் நாரா யணன், 'நான் எல்லா ஜீவ ராசிகளை யும் ஸமமாகவே பாவிக்கிறேன். (ஸமோஹம் ஸர்வ பூதேஷு) எனககு பிரத்யேகமாக வேணடியவன், வேண் டாதவன் என்பவர் எவருமில்லை. (ந மே த்வேஷ்யோஸ்தி நபரிய:) பிறப்பு, அவனவனது அனுதி ஸஞ்சிதமான கர் மாக்களின் பயனுய் மாறுபட்டு விடு கிறது. நெல் விதைததவன நெல்லை யும், கரும்பு நட்டவன் கரும்பையும் அறுவடை செய்வது போல, 'புணய. புண்யே ந சர்மணுபவதி, பாப பாபேந' புண்யகர்மாக்களைச் செய்ததால் நற்

பண்டித சிரோமணி,
ஸ்ரீ ஏ. எஸ். ரங்கநாதாசசாரியார்
ஈரோடு.

பிறப்பும், பாபகாரியஙகளைச் செய்த தால தீய ஜன்மாவும் உண்டாகிறது' என்று விளக்கினுர்

'அப்படியானுல், பாப ஜன்மாக்கள் நற்கதி யடைய எளிய வழிகளை காட்டககூடாதா? அவாகள் மேலும் மேலும் பாபங்களைச் செயது கொடிய நரகத்திற்குத் தான் செல்ல வேணடுமா?

அஹம் சிஷ்யாச தாஸீச
பக்தாச தவயீ மாதவ |
மதகருதே ஸர்வ பூதாநம்
லகூபாயம் வத ப்ரபோ ||

நான் தஙகள் சிஷ்யையாகவும், பக்தையாகவுமிருந்து தங்களிடம் வேணடிக் கொள்கிறேன். கிருபை கூர்ந்து எனக்காக, எல்லா ஜீவராசிகளும் நற்கதியடையும் நிலை யில் எளிய வழியை உபதேசித்தருள வேண்டும' எனப் பரிவுடன் வேண்டிக் கொண்டாள். அப்பொழுது, கருணு மூர்த்தியான எம்பெருமான், 'எவ னெருவன நல்லமனேநிலையில் என்னை நினைநது வழிபடுகிறுனே, அவன், இறக்கும் தருவாயில் உணர்வு அற்று கல்போலுமகட்டை போலும் நினை வறறு இருநதாலும், நான் அவனை நினைந்து அருள் செய்து நற்கதி அடையச் செய்கிறேன்' என்பதை,

ஸ்திதே மணஸி ஸுஸ்வஸதே சரீரே
ஸதி யோ நர: |
தாது ஸாமயே ஸ்திதே ஸமர்த்தா
விச்வரூபஞ்ச மாமஜம் ||
ததஸதமமரிய மாணந்து காஷ்ட,
பாஷாண ஸந்நிபம் |
அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி
பரமாம் கதிம் ||

எனக்கூறி அருளினுர். இதுதான் வராஹ சரணுகதி என்று போற்றப் படுகிறது. 'தேவி, ஒரு புஷ்பத்தை

# பகவானின் ஐந்து தோற்றங்கள்

லெக்ஷ்மிநாதனாகிய நாராயணன் ஐந்து வித தோற்றங்களில் ஸேவை சாதிப்பதாக முன்னோர் பகர்வர். இநத ஐவகைத் தோற்றங்களைத் திருப்பாவையில் ஆண்டாள் 'புள்ளுஞ்சிலம்பின காண' எனகிற பாசுரத்தில் விளக்கும் நயததை காணபோம். 'புள்ளரையன் கோவில' என்பதால் 'அர்ச்சை'யும், 'காலோச்சி' எனபதால் விபவமும், 'வெள்ளத்தரவில்' என்பதால் 'வியூஹமும', 'வித்தினை' என்பதால் 'பரமும்', 'உள்ளத்துக்கொண்டு' என்பதால் ஹார்தமும் குறிக்கப்படும அழகினை ரசிப்போம்.

— பாதூர்-புரணம் ரங்கராஜாச்சாரியார்—திருப்பதி.

எனமீது சமர்ப்பித்தாலும், ஒரு பாசுரம் பாடினாலும் நான் அவாகளுக்கு அருள் செய்யக் காத்திருக்கிறேன்'.

'மாலா, கேய ஸமர்ப்பணம் மம முதா'

'அது கூடச செய்ய மாட்டேன் என்கிறார்களே' என்று தமது வருத்தத்தை தெரிவித்துக் கொணடார். பூமிப் பிராட்டியின் திருமுகம் மிகவும் வாடியது. பகவான் மேலும் சொல்லலானார். 'தேவி! நான் உனக்கு ஒரு சிறு நிகழச்சியை சொல்கிறேன். கவனமாகக் கேள்' என்று மேலும் பேசத் தொடங்கிறார். தேவியும் மிக்க ஆர்வத்துடன் கேட்டாள்.

பாரததேசத்தின் தென் பகுதியில், தாம்ரபரணி நதி பாயும் மிகப் புனிதமான பிரதேசத்தில், திருக்குறுங்குடி என்று ஒரு திவ்ய தேசமுள்ளது. அங்கு நாம் அநாதிகாலமாக அாசசாரூபியாக இருந்து அனுக்ரஹித்து வருகிறோம். அங்கு வேத, சாஸ்திர பாரங்கதர்களான அந்தணர்களும், மற்றும் பக்தர்களான எல்லா ஜாதியினரும் இருக்கிறார்கள். அவ்வூரில் ஒரு அந்த்யஜன். தாழ்ந்த குலத்தில் பிறந்தவன். அவனுக்கு என்னிடம் மிக்க ஈடுபாடு. அவன், அவனது ஆசார முறைகளை மீறாமல், தினமும் அதிகாலையில் அவ்வூரிலுள்ள திருக்குளத்தில் நீராடி விட்டு, ஆலய வாசலில் நின்று, ஓரிரு பாசுரங்களை மனமுருகப் பாடிவிட்டு, பின்னர் தனது குலத் தொழிலைச் செய்து வந்தான.

ஒரு நாள் அதிகாலையில் அவன் திருக்குளத்திற்குச செல்லும் சமயம், ஒரு பிரம்ம ராக்ஷஸ் அவனை வழி மறித்து, அடித்துக் கொல்ல வந்தது. அவன் சொன்னான், 'ஏ பேயே! சற்று இரு. நான இன்றைய அனுஷ்டானத்தை முடித்துக் கொண்டு என் பிரார்த்தனையைச் செய்துவிட்டு வருகிறேன். பிறகு நீ உன்னிஷ்டப்படி என்னைக் கொல்லலாம்' என்று வேணடினான். பிரம்மராக்ஷஸ் முதலில் மறுத்தது,முடிவாக விரைவில்திரும்பி வருமாறுஅனுமதிஅளித்தது. அவனும் குளத்தில் நீராடிவிட்டு, ஆலயவாசல் சென்று, கைசிகப் பண்ணில் ஒரு பாசுரத்தை என்மீது பாடிவிட்டு, பேய் முன்வந்து நின்றான். பேய்க்கு ஒரே வியப்பு. இப்படி எவனாவது சாவிற்குத் துணிநது வருவானா? அது அவனிடம, 'சொனனபடி வந்துவிட்டாயே, உனக்கு என்னைக் கணடு பயமில்லையா? நீ சாவுககு அஞ்சவில்லையா?' என்று கேட்டது. அவன், 'ந பிபேதி குதச்சன,' 'அபயம் கரோபவதி' என்றெல்லாம் சொல்லியுள்ளபடி பக்தர்கள் எதற்கும் அஞ்சமாட்டார்கள் என்று பேசப்பட்டுள்ளது உனக்குத் தெரியாதா? மற்றும், சாவுக்கு நான் ஏன் அஞ்ச வேண்டும்? அது, உடலுக்குத்தானே! எனது ஆத்மாவை உன்னால் அழிக்க முடியாது. உடலை யாராலும் காக்கவும் முடியாது. ஆகையால்தான், ஸத்யம் தவறாமல் சொன்னபடி உனமுன வந்தேன்' என்றான். பிரம்மராக்ஷஸ் இவனது பேச்சைக் கேட்டு ஆசசரியமடைந்தது. 'சரி, நீ உனது தினசரி காரியமாகக் கோயிலுக்குச் சென்றாயே! அங்கு என்ன செயதாய்? என்ன பிரார்த்தனை செய்தாய்?' என்று கேட்டது. அவன், உடனே எம்பெருமான் மீது ஒரு பாட்டைப் பாடினான். அது கைசிகம் என்ற பணணில் அமைந்தது. இந்தப் பாசுரத்தைக் கேட்டுக் கொண்டிருந்த பிரம்மராக்ஷஸ தன் வடிவம் மாறி, அதனுடைய பழைய அந்தண சரீரத்துடன் காக்ஷியளித்தது. மேலும் அது 'நான் வேத மோதிய அந்தணனாக இருந்தேன். அனுஷ்டானத்தில் தவறு நேர்ந்ததால் ப்ரம்மராக்ஷஸ் ஆனேன். நீ பாடிய பாசுரத்தைக் கேட்டதால் என் பாபம் நீங்கி புனிதமடைந்துவிட்டேன்' என்று சொல்லி விடைபெற்றது. என்மீதுள்ள ஒரு பாட்டை சாதாரணமாகக் கேட்டதற்கே அத்தனைப் பயன் கிட்டியது. அவனை, 'நம் பாடுவான்' எனக்கூறி அவனுக்கு மோக்ஷமளித்தோம்.யாராவது, பக்தியுடன் தாமே பாடினால் மேலும் எத்தனை சிறப்படைய முடியும்? என்று கதையைச் சொல்லி முடிந்து இதைவிட எளிய மார்க்கம், திருந்துவதற்கு நற்கதியடைவதற்கு, என்ன செய்ய முடியும்' என்றார்.

பிராட்டி, 'சுவாமி ஒரு வேண்டுகோள். அடியேனுக்கு பூமியில ஒரு அவதாரமெடுக்க அருள் கூற வேணடும. அடியேன், தேவரீர் மீது பாமாலைகளாலும், பூமாலைகளாலும் அர்ச்சித்து, இந்த வழியைப் பின்பற்றுமாறு மக்களுக்கு எடுத்துக் கூற வேண்டும். இதுவே எனது பிரார்த்தனை' என்றாள். பகவானும் ஒரு மந்தஹாஸத்துடன், அதற்கென்ன தக்க ஸமயத்தில் அப்படியே செய்யலா

மென அருள்பாலித்தார். இப்படியாக வராஹாவதார காலத்தில் பூமிப் பிராட்டியின் திரு உள்ளத்தில் ஏற்பட்ட வித்துதான், பிறகு கலியில், அவள் ஆண்டாளாக அவதரித்த ஸமயம் 'திருப்பாவை'யாகவும், 'நாச்சியார் திருமொழி'யாகவும் மலர்ந்தது.

வராஹாவதாரத்திற்குப் பின், எம்பெருமான் பல அவதாரங்கள் எடுத்த போதெல்லாம், மஹா லக்ஷ்மியே ஸ்ரீ ஸீதையாகவும், ஸ்ரீ ருக்மிணியாகவும் அவதரித்து விட்டாள். ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் முடிந்தபின் ஒரு நாள் பூமிப் பிராட்டி,

"பூர்வம் வாரிநிதௌ வராஹவபுஷா
மக்நாமஸமுத்ரித்யமாம்,
அங்கேநாத, நிதாய ஸர்வ ஸுகரர்
முக்தே ருபாயஸ்த்வயா |
மாலாகேய ஸமர்ப்பணம் மம முதே
தயுக்தம் தமேவாதுன,
ஜாதாஹம் புவி தாசயாமி க்ருபாமே
தேஹ்யனுக்ஞாமிதி" என்று,

'நாதா! வராஹாவதார ஸமயத்தில் எனக்குத் தருவதாகச் சொன்ன சந்தர்ப்பம், இன்னமும் கிட்டவில்லையே? நான் மாலைகள் சமர்ப்பிக்கவும், பாசுரங்கள் பாடவும் வாய்ப்பு ஏற்படவில்லையே!' என்று ஏக்கத்துடன் பகவானிடம் நினைவூட்டினாள். பகவான் சிரித்துக் கொண்டு, 'உன் கருணையே கருணை! ஜீவராசிகளை நம் பக்கம் திருப்புவது அவ்வளவு எளிதில்லை. நான் ராமாவதார காலத்தில், 'ஒரு தடவை என்னைச் சரணமடைந்தவர்கட்கும், உன்னைச் சார்ந்தவன் என்று கூறுபவனுக்கும், அவன் யாராயிருந்தாலும் அபயமளிக்கிறேன்' என்று சொன்னேன். ராவணாதிகள் திருந்தினார்களா? போகட்டும். மறுபடியும் கிருஷ்ணாவதார ஸமயம், அர்ஜுனனை சாக்கிட்டு, மறுபடியும் இதே தத்துவத்தை, 'எல்லாவித மான கர்ம பலன்களையும் விட்டு விட்டு என்னைத் தஞ்சமடைவாயாக நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவித்து, மோக்ஷமடையச் செய்கிறேன், வருந்தாதே' என்று சொன்னேன். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஞானிகளான பீஷ்ம, த்ரோணாதிகள்கூட, மாறாமல் தம் வழிகளிலேயே சென்றனர். அப்படியிருக்க நீ அவதரித்து பாசுரம் பாடி என்ன திருத்திவிடப் போகிறாய்?" என்றார். பூமிதேவி, மிகவும் கலக்கமடைந்தாள். எனினும் சமாளித்துக் கொண்டு, 'ஸ்வாமி! தாங்கள் ராமாவதார காலத்தில் கூறியவைகள் கடலின அலை ஓசைகளால் அனைவரது செவியிலும் விழாமல் போயிருக்கும். ஸ்ரீகிருஷ்ணாவதார காலத்தில் போர்க்கள சந்தடியில் உங்கள் வார்த்தை எடுபடாமல் போயிருக்கும். நான் இனிய தமிழில் பாசுரம் பாடுவதுடன், அனுஷ்டித்தும் காட்டினால், மக்கள் மாறக் கூடும். குழந்தைக்கு நோய் வந்தால் அம்மாதானே பத்தியமிருந்தாக வேண்டியுள்ளது. ஆகவே நான் நிச்சயம் ஜனங்களை மாற்ற முடியும்' என்று பதிலுரைத்தாள்.

பகவானும், 'கலௌ தத்ஹரி கீர்த்தனாத்' என்பதை நினைந்து, அதே வராஹ க்ஷேத்ரமான ஸ்ரீவில்லிபுத்தூரிலே, மிகப் புனிதமான திருத்துழாய்ச் செடியின் அடியிலே பூமிப் பிராட்டியை அவதரிக்க அருள் செய்தார். வேத வடிவான கருடாழ்வான் விஷ்ணு சித்தர் என்ற பெயருடன் தோன்றி ஜனகனைப் போல் காரணத் தந்தை ஆனார். ஆண்டாள் நிலையில் இருந்து திருப்பாவை, நாச்சியார் திருமொழி பாசுரங்களைப் பாடிய பூமிப் பிராட்டி, தமது வராஹாவதார காலப் பேச்சை, பகவானுக்கு நினைவூட்டுவது போல் கீழ்க்கண்ட பாசுரத்தை நாச்சியார் திருமொழியில் அருளியுள்ளது சுவைமிக்கது.

"பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்குப்
பண்டொரு நாள்,
மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்
பன்றியாம்,
தேசுடைய தேவா திருவரஙகச்
செல்வனார்
பேசியிருப்பனகள் போக்கவும்
பேராவே"

—ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*

## கன்றுடன் தாய்

ஒரு சமயம் அகாசுரன் என்பவன் மலைப்பாம்பாக மாறினான். மலையின் பெரிய குகை போல் தனது வாயைத் திறநது வைத்துக்கொண்டான். அப்போது அந்த வழியாக வந்த பசுக்களையும் கன்றுகளையும் விழுங்கினான். இதைக் கண்ட கிருஷ்ணன் அதன் கழுத்தில் புகுந்தான். தனது திருமேனியை வளர்த்துக்கொணடு அதன் தலையைப் பிளநது பிராணனைப் போக்கினான். கன்றுகளோடு கூடிய பசுக்களைக் கிருஷ்ணன் காத்தருளினான். அதனால் கிருஷ்ணாவதார காலத்தில் கறவைகள் (பசுக்கள்) கன்றுகளுடனே இருந்ததாம். இதையே ஆண்டாள் 'கற்றுககரவை' என்கிற 11-ஆவது திருப்பாவை பாசுரத்தினால் விளக்கம் தருகிறார்.

— பாதூர்-புராணம் ரங்கராஜாச்சாரியார் — திருப்பதி.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவவுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எநதவிதமான தர்மமும் சிறநதது இல்லை அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருககும திருமலையில் யாததிரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவவகையில் தி.தி. தேவஸ்தானம,திருமலைக்கு வரும் பகதர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிககும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நிதய அன்னதான திட்டம" ஒன்றினை செயறபடுததியுள்ளது.

## திட்டம் எபபடி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேணடும். தி.தி.தே. அத்தொகைககு ஈடான தன பஙகினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருநது நாள்தோறும் 400 யாத்திரிகர்களுககு உணவு வழங்கப்படும.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனஙகள் ஆகியோரிடமிருந்து பெறபபடும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின பெயா முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயனகளும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நனகொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும்,மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளாகள வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள இததிட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல. வி. ராமயயா - சென்னை. ரூ. 10 இலட்சம
2. திரு. மன்சிங்கா - பம்யாய். ரூ. 20 இலட்சம
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கததா ரூ. 10 இலட்சம
4. திரு. ஈஸவா பிரஸாத் பொத்தாா - கலகத்தா. ரூ. 10 இலட்சம
5. திரு. நாடடுபையா அம்பானி - ரிலையனஸ் டெகஸ்டைல இணடஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கலகததா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம. ஆர். சாபரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத கோயஙகா — சோமேன், இநதியன் எகஸபிரஸ் பத்திரிகைக குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு:

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

**செயலாட்சித்தலைவர்.**

# திருமால் திருப்பதிகள்

இயற்கை வாழ்வில் கட்டுண்டுக் கிடந்த பழந்தமிழர், இயற்கைச் சூழ லில் காட்சி வழங்கிய இறைவனுக்கு நிலங்கள் தோறும் வேறு வேறு பெய ரிட்டுக் கோயில்கள் அமைத்து, விழாக்கள் ஏற்படுத்தி இன்புற்றனர்.

திருமால் முல்லை நிலக்கடவுளாக விளங்கினர். சங்க நூல்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களில், புலவர்கள் இவரைப் பல வாறு சிறப்பித்துக் கூறியிருக்கிறார் கள்.

திருமால், இவ்வுலகம் முழுமையும் ஏககாலத்தில் தன் மணி வயிற்றில் அடக்கியிருக்கும் பெருவடிவமைப் பையும், அனைத்துயிருள்ளும் மறை முகமாய்க் கலந்து நிற்கும் நுண் வடி வமைப்பையும் பெற்றவர்.

"திருவாழ்மார்பர், திருத்துழாய் வாசன், தம் கொப்பூழில் தோன்றிய தாமரைப் பூவில் நான் முகனைத் தோற்றுவித்தவர், அடிய வர்களுடைய பகைவரை அழித்த புகழாளர், முதல் முறை இடை முறை, கடைமுறை நிலையில் அவர் பிற வாப் பிறப்பில்லை. பிறப்பித்தோர் இல்லை. தனித்தகுதி உடையவர். அவர் புகழ்அளப்பரியது", என்று பல வாருகப் புகழப்படும் திருமாலையும் அவர் உறையும் கோயிலையும் கல் வெட்டில் இடம் பெறும் வகையை யும் அனைவரும் அறிந்து அகமகிழ வோம்.

ஆழ்வார்கள் காலத்தில் 108 திருப் பதிகள் பாடப்பெற்றன. இவை பெரும்பாலும் செங்கற்கோயில்களா கவே இருந்தன. மகேந்திரவர்மன் காலம்முதல் குடைவரைக் கோயில் களும், பின்னர் கற்றளி அமைப்பு களும் தோன்றலாயின.

மகேந்திரவர்மன் காலத்தில் மகேந் திரவாடி, மாமண்டூர், சிங்கவரம், நாமக்கல் என்ற ஊர்களில் திருமால் கோயில்கள் சமைத்தனர். பல்லவர் வளர்த்த கற்றளி கலை, விசயாலயன் வழிவந்த சோழமன்னர்கள் காலத் தில் ஏற்பட்ட பேராதரவால் மிக்க உச்ச நிலையை அடைந்தது.

மாடக்கோயில் என்பது வேறொரு வகைக் கோயிலாகும். இம்மாடக் கோயில் சங்க காலத்தை ஒட்டி அர சாண்ட கோச்செங்கட் சோழன் வர லாற்றோடு இணைத்துப் பேசப்படு கிறது. கோச்செங்கணன் முற்பிறப் பில் திருவானைக்காவில் சிலந்தியாகப் பிறந்து, திருவானைக்காவுடையப் பெருமான் மீது, நாவல் இலைகள் விழாதவாறு தன் வாய் நூலால் விதானம் அமைத்து வழிபட்டான். அதே காலத்து யானையொன்று அப்பெருமான் மீது, பக்திகொண்டு நாடோறும் காவிரி நீரைத் தன் துதிக்கையால் கொணர்ந்து பெரு மானை நீராட்டிப் பூவிட்டு வழிபட் டது. யானை நீராட்டினுல் சிலந்தி பின்னிய வலை விதானம் சிதைந்தது. இப்படிப் பல முறை நிகழ்ந்தன.

பின் ஒரு நாள் சிலந்தி, யானையின் துதிக்கைக்குள் நுழைந்து துன புறுத்த, யானை துதிக்கையைப் பாறையில் மோதவே சிலந்தி கோச் செங்கட் சோழனுகத் தோன்றினன். அவன், யானை ஏறி உள்ளே நுழையாதவாறு மாடக் கோயில் எழுபது சமைத்தான் என்பதை, திரு மங்கை மன்னர்,

"இருக்கிலங்கு திருமொழிவாய்ப்
பின்னை கேள்வன
மன்னெல்லாம் முன்னவியச்
சென்று வென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்ற
வேந்தன்
சிரந்துணித்தான் திருவடிநும்
சென்னிவைப்பீர்
இருக்கிலங்கு திருமொழிவாய்
என தோளீசற்கு
எழில்மாடம் எழுபது
செய்துலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன்
சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம்
சேர்மின்களே!"

என்று குறிப்பிடுகிறர் என்றல், அது பண்டைக்காலத்து வைணவப் பெரி யோர்கள் மதவேறுபாடும் காழ்ப் புணர்வில்லாமலும் இருந்தனர் என பதைக் காட்டுகிறது

**வில்லியனூர் திரு. ந. வேங்கடேசன்.**

திருமால்புரக்கோயிலில் (திரு மாற்பேறு) நம்மாழ்வாருடைய பதி கங்கள் உள்ளிட்ட நாலாயிர திவ்வி யப் பிரபந்தத்தை ஓதுவார்க்கு ஊதி யம் வழங்கத் திருமால்புரத்தின் பக கத்துச் சிற்றூராகிய கோவிந்தபாடி யில் ஒரு நிலம் 'நன்கொடை'யாக வழங்கப் பெற்றுள்ளது. முதற்பராந் தகன் ஹேமகர்ப்பம், துலாபாரம் முதலிய நற்செயல்கள் செய்தான்.

ஹேம கர்ப்பதானும், துலாபா ரதானும் கொள்ளப்பட்ட பொன் னும் மணிகளும் தெய்வங்களின் அணி கலன்களுக்கும், கோயில் கட்டிடங் களை விரிவாக்குதற்கும், கோயில் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்தப் பெற்றன. உத்தரமேரூர் சுந்தரவர தப் பெருமாள் கோயில் துலாபார தானத்தால் பெரும்பயன் பெற்றது. அது முதல் அக்கோயில் துலாபாரக்

# இடைமருது

மருத மரததை ஸதலமரமாகக கொணடு புகழ் பெற்ற சிவத்தலங் கள் மூனறுகும. அவைகளை முறையே முதல மருது, இடைமருது மற றும் புடைமருது என வழஙகுவா.

முதல் மருது ஆநதிர மாநிலத்தில், கர்னூல் அருகே உள்ள ஸ்ரீ சைலம, திருப்பருபபதம மறறும மல்லிகார்சசுனம் என அழைக்கப படும திருத்தலமாகும்.

புடைமருது தென்தமிழ் நாட்டில் உள்ள திருப்புடைமருதூர் என்று வழஙகப்படும சிவததலமாகும.

இடைமருது தமிழ்நாட்டில், தஞ்சை மாவட்டத்தில் கும்ப கோணததிற்கும் மயிலாடுதுறைககும் இடையே உள்ள திருவிடைமரு தூர் என்று சிறப்பிககபபடும திருததலமாகும்.

இனி, இங்கே இடைமருதுவின் சிறப்பைப் பற்றி காணபோம்.

இததிருத்தலம் காவிரியின் தென்கரையில் உள்ளது. மூவரா லும் பாடல் பெறற பெருமையுடையது. பட்டினத்தாா தனது 'திரு விடை மருதூர் மும்மணிககோவை' எனற நூலில் இத்திருத்தலப பெருமையினை விளககுகிறுர். வசிட்டர், சிவவாககியர், பததிரகிரியார் உள்பட பல முனிவாகளும, தேவாகளும இங்குறையும ஈசனைப் பூசிதத தாக வரலாறு கூறுகிறது.

பட்டினத்தார் சிலே கீழக்கோபுர வாசலிலும், பத்திரகிரியார் சிலே மேலககோபுர வாசலிலும உள்ளன. இவவிருவரும இங்குப் பல நாள் தஙகி அருள் பெற்றதாகக் கூறுவர்.

மௌனமாய்த் தவஞ்செய்யும் மூகாம்பிகை அம்மை கோவில் வெளியில் தென்புறத்தில் உளளது.

இத்திருத்தலத்தைச் சுறறி சிவாலய அமைப்புப்படி நடேசர் சந் நிதி சிதமபரமாகவும், தட்சிணுமூர்த்தி சநநிதி ஆலங்குடியாகவும், நவக்கிரகக்கோயில சூரியனுர் கோயிலாகவும, விநாயகர் சந்நிதி திரு வலஞ்சுழியாகவும், முருகர் சநநிதி சுவாமிமலையாகவும், வைரவர் சந் நிதி சீர்காழியாகவும், சண்டேசா சந்நிதி திருச்சேய்ஞுலூராகவும் பரி வார சநநிதிகளாக அமைநதிருப்பது இத்திருத்தலத்தின தனிச் சிறப்பு எனறு கூறுவர்

இங்குறையும ஈசனை மகாலிங்கேசுவரா என்றும் மருதவாணர் எனறும அழைககின்றனர். அமமையின் பெயர் நனமுலே நாயகி ஆகும. தலமரம ஏறகனவே கூறியபடி மருதமரமாகும். தீாததம் காவிரி ஆறுகும ஆனுல் இத்திருததலத் தீர்த்தப் பகுதி அயிராவனத் துறை என வழங்கபபடுகிறது

தைப்பூசத்தில இங்குறையும இறைவனுக்கு நடைபெறும் புனித நீராட்டு விழா சிறப்புடைததாகும்.

இத்திருக்கோயிலின் பெரிய சுற்றுப் பிரகாரத்தைச சுறறி வழி படுவோரின இனனல்களும், நோய்களும் நீங்குமெனறு கூறுவர். சிறப் பாக 'மனநோய்' விலகும என்று விளம்புவர். வரகுணதேவரைப் பற் றிய வரலாறு இதனைப் பறைசாற்றுவதாக உள்ளது.

வாருங்கள! திருவிடைமருதூருக்கு!!

— முடிவை முத்து.

கோயில் எனறு அழைக்கப்பெறறது. ஒரு கோயிலில் துலாபார தானம் நிகழ்நதது எனறுல, அநநாள் அககோயில் வரலாற்றிலும், அககால மக்களின வாழக்கையிலுமம ஒரு பொனனுளாகும்.

வரலாறு விளக்கும் திருமால் கோயில்கள்:- காஞ்சிபுரம வரத ராஜப் பெருமாள—தாயார் சனனதி யில் வடபுறததில நிற்கும கல்லில் கீழ்வரும செய்தி பொறிககப் பெற் றுளளது.

தோடரமல்லா எனபவர் காநாடக நவாப் சதாததுல்லாகானிடம் சேனு பதியாக இருநதவர். செஞ்சி அரசன் தேசிங்குராஜனுடன போர் புரிந்த வரும் இவரே.சுமார்கி. பி 1688 இல் தென்னுட்டில் உள்ள மராத்தியர்களை முறியடிபபதற்காகத திலலி பாதுஷா அவுரஙகஜீப், ஒருபடை திரட்டி அனுப்பி வைத்தான. அப்படை கள் வரும் இடஙகளில் உள்ளகோயில் களை இடிததும, விக்கிரகங்களை உடை த்தும் விடுவாாகளே என்று கருதி, தமிழ்நாட்டுக் கோயில் நிர்வாகிகள் தற்காப்பிற்காகத் தக்க ஏற்பாடுகள் செய்தார்கள் அநத வகையில் காஞ்சி வரதராஜர் திருவுருவம் உடை யார்பாளையம காட்டுக்குப் போய்ச் சோந்தது.

கலவரம நீங்கி நாட்டில் அமைதி நிலவியதும்,கோவில் விககிரகங்களைத் திரும்பக் கொணாநது பிரதிஷ்டை செயய விரும்பினர். ஆனுல், திரு மேனியைக் கணடு வணஙகிப் பக்தி பரவசம கொணட உடையார்பாளை யம பாளையக்காரர் அமமூர்த்தி யைத் திரும்பக் கொடுகக மறுத்து விட்டார். பின்னா ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசாரிய ஆத்தான் ஜீயர், தம சிஷ்யா லாலா தோடர மலலருடைய உதவியை நாடினர். அவர் படையுடன சென்று பாளை யக்காரர்களை மிரட்டி, விக்கிரகத் தைத் திரும்பப் பெற்று வந்தார். பினனர் மூர்த்தி பல சிறப்புக்களுடன் கோவிலில் பிரதிஷ்டை செய்யப்

பெற்றது. இன்றும், இதையொட்டி வரதராஜக் கோவிலில் ஆண்டு தோறும உடையார்பாளைய உறசவம் நடைபெறுகிறது.

இது போன்றே திருவரங்கநாதர் திருவுருவத்தை ஊர் ஊராகத் தூக்கிச சென்றனர்கள். இறுதியில் விஜய நகர அரசனின கபபண உடையாரின் தளகாத்தரான கோபணனுவின் ஆல அததிருமேனி திருமபவும ஸ்ரீ ரஙகததில் பிரதிஷடை செய்யப் பெறறது

கோயில்கள ஓரினத்தாரை மட்டும் ஆதரித்தது என்று கூறும் கூற்று ஆதாரமற்ற கருத்து என்று கூறும் கல்வெட்டுகள் பல உள்ளன, கோயிலில் பணியாளர்களாக கறறுத் தேர்ந்த அந்தணர்களுக்கும், அடியார்களுககும், யாத்திரிகர்களுக்கும் உணவிடுதல், சந்தனம் அரைப்பவர், திருச்சுற்றுலாவின போது குடைபிடிப்பவர், திருநந்த வனம் அமைப்பார், பூப்பறித்து வருவார், மாலைகள் தொடுப்பாா, கோயிலைப் பெருக்கி மெழுகிச் சுத்தம் செய்வார், கோயில் பாடகர்கள், முரசறைவார், திருப்பதியம் ஓதுவார், கொமபு ஊதுவார், கோயிற் மெய்க்காப்பாளர், கோயிற்கணக்கர், கணக்கைச் சரிபார்க்கும தணிககையாளர், குசக கலம (மட்பாணடம்) இடுவார், தெய வங்களுககுரிய ஆடைநெயது அமைப்பார், ஆடைகளுககுச சாயமிடுவார், திருமஞ்சனத்துக்கு நீர் கொணர்வாா,நாளதோறும் பஞசாஙகம் படிக்கும சோதிடர், கோயில் கொததனுர், தச்சர், கோயில் பூசாரிகள, சமையறகாரர், இசைபாடுவாா ஆகியோருககு வருமானமும, வீட்டு வசதியும கொடுககப்பட்டுப பலவகைத தொழிலாளிகளுககும கோயிலகளில் பணி புரிய வாயப்பளிக்கவும் செயயப் பெற்றது.

பாலாறு, வேகவதி, செய்யாறு என்ற மூன்று ஆறுகள ஒனறு சேரும் இடம் திருமுக்கூடல என்று அழைக்கப் பெறும் ஊர். அங்கு, இயற்கைச் சூழலோடு அமைந்துள்ள வேங்கடேசப் பெருமாள கோயிலில் காணபபடும வீரராசேந்திரன காலத்துக கல்வெட்டொனறில் சிறப்புமிகக செய்திகள காணபபடுகின்றன.

ஆணடு வருமானமான 3243 கல நெல், $216\frac{1}{2}$ காசுப் பொனனும கோயிலுககு என்று செலவிடபபட்டதோடு, வேதம பயிலும ஒரு பள்ளியை நடததி, அதனை ஒட்டி ஒரு மாணவா விடுதியை அமைத்து அதறகுரிய செலவினஙகள், ஓா ஆதுலர் சாலையை (மருத்துவ இலலம்) நிகழ்ததுவதறகுரிய பல்வேறு செலவினங்களுக்கும் பயனபடுத்தப் பெற்றன.

நித்திய அவிசு பலி,சந்தனககாப்பு, விளககிற்கு எணணெய, திருவிழாககள் கொணடாட செலவுகள, கோயில் தெய்வஙகளுக்குரிய திருப் பரிவட்டஙகள. திருப்பதிககுச செல்லும் யாத்திரிகர்களுககு உணவிடுதல், திருவிழாக் காலஙகளில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உணவிடுதல், கோயில் சோதிடர், திருவாய்மொழி ஓதுவார், 'வீரசோழன்' எனனும் பெயருடைய பூந்தோட்டம் அமைத்துப் பராமரிப்பார், பட்டர்கள், கோயிற் கணக்கு எழுதுபவர், நீா கொணர்பவர், குசக்கலம் இடுபவர் முதலியோருககு நேரும் செலவினங்களோடு கோயிலைப பழுது பார்ப்பதற்குரிய செலவும இந்த வருமானத்திலிருந்து கோயிலுக்காகச் செலவிடுவதறகு வாய்ப்பும் அளிக்கப் பெற்றது.

திருநாகேசுவரததுத திருவிணணகரம எனற திருமாற்கோயில் இப்போது உப்பிலியபபன என்று இன்றும அழைககப்பெறறு வருகிறது. ஒப்பிலியப்பன என்றும் முன்பு இருநதது. இங்குள்ள இராசேந்திரனுடைய 6 ஆம் ஆணடு கல்வெட்டொன்று முதல் இராசேந்திர சோழ தேவனுடைய சேனையில் பணியாற்றிய உதவிமாவுத்தன் வழஙகிய நிலக்கொடையின் வருமானத்திலிருநது சேர்நத பெருந்தொகையைக் கொணடு முததுக்களும இரத்தினங்களும பதிககபபெறற பொனனணி யொனறு இறைவனுக்கு வழங்கப் பெறற செய்தியைக குறிப்பிடுகிறது. இக்கோயில் திருப்பதி திருமலை வேங்கடாசலபதி கோயிலை ஒத்த புனிதமுடையதாக அடியவர்கள் கருதுகினறனா. இவ்இறைவனின் அவதாரமாகக கூறபபடும இவ்வூரவரான கோபால தேசிகர் முனித்திரய முறையைத தோற்றுவித்தவராவர்.

காட்டுமன்னர்குடி வீரநாராயண விண்ணகரமானது வைணவர்களுக்கு மிகச சிறந்த திருப்பதியாகும். இங்கு வைணவப் பெரியாா நாதமுனிகளும் அவருடைய பெயரரான யமுனைத் துறைவன் ஸ்ரீ ஆளவந்தாரும அவதரித்தனர். சுவாமி எம்பெருமானர் என்னும் ஸ்ரீ ஆளவந்தாரே ஸ்ரீ இராமாநுசருடைய ஆன்மீகககுரு ஆவார். இந் நாதமுனிகளே நமமாழவாரைத் திருககுருகூரில் அர்ச்சாவதாரத்தில் தரிசித்துத் தியானம் செய்து அவா அருளால் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை உலகுக்கு அருளிச் செய்தவராவர். ஏறததாழ இதே காலத்தில பக்கத்து ஊராகிய திருநாரையூரில் அவதரிநத நம்பியாணடார் நம்பிகள் பொல்லாப் பிளளையாரின் அருள் பெறறு முதல் இராசராசன் காலத்தில சிதமபரததிலிருநது சைவத்திருமுறைகளை உலகிற்கு வெளியிட்டார் எனபதும உளங்கொளத்தக்கது.

வைணவா காட்டுமனனர்குடியை வீரநாராயணபுரம என்று குறிப்பிடுகின்றனர். கலவெட்டில் அது 'வீரநாராயண சதுர்வேதிமங்கலம்' என்று வழங்கப்படுகிறது. பராந்தகனின் விருதுப்பெயர் 'வீரநாராயணன்' எனபது. அவனல புதியதாக நிர்மாணிக்கப் பெறறது.கனனியாகுமரிக் கல்வெட்டுகள் 'பகைவர்களுககு யமனைப் போனற பராநதகன், பிரமன் சுவர்க்கததைப் படைத்தாற்போல வீரநாராயணன பல சிற்றூர்களைப் படைத்து, அவற்றைக் கற்றுவல்ல

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்க டேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேயாா்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச சிக்கலும மேலாண்மைக்கு ஏறபடுகின்றது என்ப தைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அந்தணாகளஅனுபவிக்குமாறு விடுத் தான்' என்று குறிப்பிடுகிறது. இவ் வூர் அருகில் உள்ள "வீரநாராய ணன" ஏரி, இக்காலத்து 'வீராணத் தேரி' என்னும் பெயரால அழைக்கப் பெறுகிறது.

புதுவை. மாநிலததிலும், அதனைச் சுறறியுள்ள பகுதிகளிலும உள்ள திருமாற கோயில்கள்:

திருபுவனையில் அருளாகர விண்ண கராழ்வார், வீரநாராயண விண்ண கர், திருநாராயண விண்ணகர், இராஜேந்திர சோழ விண்ண கர், திருமாலிருஞ்சோலையாழ்வார், அபராஜித விண்ணகர், திரு மேற்றளி ஆழ்வார் முதலிய திருமால கோயில்கள இருந்தன. கழுக்குலாம் பாகத்தில "முடி கொண்ட சோழ விண்ணகர்" என்ற பெயரில் திருமாற் கோயிலொன்று இருநதது.

இன்று சிங்கிரி கோயில் எனப்படும்- அக்காலததில் அயிற்றூர் — ஊரில் உறையும் இறைவனை 'நரசிஙகப்பெரு மாள்' என்று கூறுவது வழககம. ஆனல், திருபுவனைக் கலவெட்டு, இத் திருமாலை 'சிஙகவேள குன்றுடைய ஆழ்வார்' என்று குறிப்பிடுகிறது. இப்பெயர்தான் இன்று 'சிங்ககிரி கோயில்' என்றும் 'சிங்கிரி குடி' என் றும் அழைக்கப்பெறுகிறது.

திருபுவனமாதேவி சதுர்வேதி மங் கலத்து எல்லைக்குள் ஸ்ரீ குறுங்குடி ஆழ்வார், ஸ்ரீ மத்துவராபதியாழ் வார், தென் திருவேங்கடத்தாழ்வார், திருவாய்ப்பாடி ஆழ்வார், திருஅய் யோத்தியாழ்வார், அருளாகர ஆழ வார், மேலை ஈசானவிய கிரா மத்தாழ்வார் முதலான திருமால் கோயில்கள் இருந்து மறைந்துள்ளன. அவற்றிற்குச சொந்தமாக நிலமும நந்தவனமும் இருந்தன. நெட டைப பாகசுத்திற்கு அருகில் கரு மாணிக்க விண்ணகர் என்ற பெயரில் திருமால்கோயில் ஒன்று இருந துள்ளது. காலப்போக்கில் அககோயில் மறைநது விட்டாலும், இன்றைக் கும் அககோயில் இருந்த ஊர் கரிய மாணிக்கம் என்ற பெயராலேயே வழங்கப் பெறுகிறது.

பாகூர் "திருநாராயண விண்ண கர்" முதலாம் இராஜராஜ சோழனின 15ஆம் ஆட்சியாண்டில் (15-8-1001) பிலவ வருஷம ஆவணிமாதம் 11 ஆம தேதி செவ்வாய்க்கிழமை உத்திரட் டாதி நட்சத்திரத்தில் பாகூரில ஊரின் நடு இடத்தே திருநாராயண விண்ணகர் என்ற பெயரில் கற்றளி யாக அமைக்கபபெற்ற திருமால் கோயில ஒன்றிருந்தது

அதன் பெயர் "திருநாராயண விண் ணகர். பிறகாலத்தில இக்கோயில் சிறிதளவு சிதைந்து போனதால் பாகூ ரில் வாழ்ந்த சவராயலுநாயகர் என்ற கிருத்துவருடைய முயற்சியால் இக்கோயில் முழுவதும் இடிக்கப்பெற் றது. 1861 ஆம் ஆண்டில் 'சுயார்' என்னும் இஞ்சினியர் இதனை இடித் தார். அதே ஆண்டில் அங்கு மாதாக் கோயில் ஒன்று கட்டுமபணி தொடஙகப் பெறறது. 1865 ஆம் ஆணடில் மாதாக் கோயில் முழுமை யாக உருப்பெற்றது. 28-1-1886 ஆம நாளில் மாதாக கோயிலுக்கு ஆலய அபிஷேகம நடைபெறறது. அககாலக் கட்டததில் முன்பு இருநத திருமால கோயிலின மூலவா திருமேனி கோயி லிலிருநது அகற்றப்பெற்றது. திரு நாராயணன் எனபதற்கு 'லட்சுமி நாராயணன்' என்பதுதான் பொருள. இடத்தொடைமீது இலட்சுமியை அமர்த்தி, அமாந்த திருக்கோலத்தில காட்சியளிக்கும இத்திருமேனி சிதைக் கப்பட்ட நிலையில், பாகூரின் தெற கேயுளள படப்பனகுளத்து விநாயகா கோயிலில் தற்போது வைக்கப்பெற் றுள்ளது. சுமார், 1932 ஆம ஆண டில் இத்திருமால் கோயிலைச் சார்நத இராஜமன்னர், திருமகள், நிலமகள் ஆகியோரின அழகிய வேலைப்பாட மைந்த சோழர்காலத்துச செப்புத திருமேனிகள் அகழந்தெடுககப்பெற றன.

சோழர் காலத்தில் இப்பகுதியில் வழக்கிலிருந்த அளவைக் கருவிகள், வாய்க்கால் வழி, ஏரி, சேரி முதலான வைகளும் திருமாலின் அவதாரப் பெயர்களைப் பெற்று விளங்கின

"உலகளந்தபடி" முகத்தல் அள வைக்கருவி. "பவித்ரமாணிககப் பேரேரி". இது காரைக்கால் பகுதியில் உள்ளது. கோவிந்த சேரி, ஸ்ரீதரச சேரி, தாமோதரச்சேரி, ரிஷிசேவச் சேரி, வாமனச்சேரி விஷ்ணுச்சேரி முதலானவை சிலவாகும்.

கிருஷ்ணவதி, ஸ்ரீதரவதி, பவிதர மாணிகக விதி, விஷ்ணு விதி முதலிய வதிகளும தாமோதரவாய்க்கால், பவித்ரமாணிக்க வாய்க்கால் என்றும் பல பெயர்களில் திருமால் பெயர்கள் வழங்கப்பெற்றன.




ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள்

என்று அழுத்தந்திருத்தமாகக் கூறி வைத்தார். 'நீ கடமையைச் செய்! பலனை நான் தருகிறேன்.! அதை எவ்வாறு கொடுப்பது என்பது எனக்குத் தெரியும்! அதைப் பற்றிச் சிறிது கூட நீ கவலைப்பட வேண்டாம்! நீ அவ்வாறு கவலைப்பட்டு எதுவும் ஆகப் போவதில்லை! எல்லாம் என் கையில் இருக்கிறது!' என்பது 'கடமையைச் செய்! பலனை எதிர்பார்க்காதே' என்ற வாக்கியத்தின் விளக்கமாகும்.

இதற்கு இன்னும் ஒருபடி மேலே போய்ச் சொன்னால் 'முழுவதுமாக என்னிடம் சரணடைந்து விடு! பிறகு உன்னுடையது என்று ஒன்றுமில்லை' என்பதுதான் 'ஜகத்குருவாகிய நாராயணன்' பார்த்தனுக்குச் சொன்ன

'உலகில் எப்போதெல்லாம் அதர்மம் மேலிட்டு தர்மம் வாடுகிறதோ அப்போது நான் என்னை உலகில் சிருஷ்டித்துக் கொண்டு தர்மத்தைக் காப்பாற்றுவேன்' என்பது பகவான் ஸ்ரீ கிருஷ்ணனின் வாக்கு. 'ஞானியும் நானும் ஒன்றே' என்றும் பகவான் கீதையில் கூறுகிறார்.

அப்படி இவ்வுலகுக்கு தர்ம ரட்சணத்துக்காக அனுப்பப்பட்ட ஞானிகளில் மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒருவர், இவர் 1870ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 22ஆம் நாள்-கலியுகாதி 4970 சுக்ல ஆண்டு தைத் திங்கள் 11-ஆம் நாள் சனிக்கிழமை ஹஸ்த நட்சத்திரத்தில் வழூர் என்ற கிராமத்தில் தோன்றினர். தமிழ் நாட்டில் வட ஆற்காடு மாவட்டம்

# தஞ்சம் அளிக்கும் தவச் செல்வர்

உலகம் முழுவதும் நாம் இன்று ஒரு காட்சியைக் காணகிறோம். ஏதோ ஒரு காரணத்தினுல் மக்கள் பரபரப்பு அடைந்து காணப்படுகிறார்கள்! 'அடுத்து என்ன ஆகுமோ? என்ன விளைவோ?' என்ற பரபரப்பு! நாம் இவ்வாறு செய்தோமே இப்படி முடிவு கிடைத்தால் நன்றாக இருக்குமே என்ற பரபரப்பு!

சரி! ஒரு கட்டத்தில் நாம் எதிர்பார்த்தது நடந்துவிட்டது. அடுத்து அதற்கு மேல் இன்னுமொரு பரபரப்பு தோன்றி 'என்ன ஆகுமோ?' வும் கூடவே வந்து விடுகிறது! இதனால் மனித உடலும் மனமும் வெகு விரைவில் சீர் குலைந்து விடுகிறது. ஒரே சீராக ஓடவேண்டியவண்டியைத் துரத்தித் துரத்தி நூறு, நூற்றைம்பது கிலோ மீட்டர் வேகத்துக்கு ஒட்டினால்?

அதனால்தான் ஜகத்குருவாகிய பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், 'கடமையைச் செய்! பலனை எதிர்பார்க்காதே!' தாகும். அவனுக்கு மட்டுமல்ல! இந்த உலகத்துக்கே சொன்ன மொழியாகும்.

பன்னெடுங்காலம் தொட்டே நம் பாரத நாட்டில் தோன்றிய மகான்கள் அத்துணை பேரும் இதையேதான் சொல்லி வந்திருக்கிறார்கள். இன்றும் சொல்லி வருகிறார்கள்.

வாழ்வியல் விளக்கங்களை மகான்கள் தந்து விட்டுப் போயிருக்கிறார்கள். தாமே வாழ்ந்து காட்டி இதற்கு மேல் எதுவுமில்லை என்று மக்களுக்குப் புரிய வைத்தவர்கள் பலர்.

அவர்களுள் ஒருவர்தான், திருவண்ணாமலையில் சுமார் ஐம்பத்தாறு ஆண்டுகள் முன்னால் வாழ்ந்து காட்டிய மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்.

ரதிபதி
பாண்டிச்சேரி.

வந்தவாசி வட்டத்தில் மருதநாடு வழியாக உத்திரமேரூர் செல்லும் வழியில் அமைந்த கிராமமே வழூர் அக்ரகாரம். இன்று இது மருவி 'வழூர் அகரம்' என வழங்கப்படுகிறது.

மகான், திவ்ய முக்தி க்ஷேத்ரமான காஞ்சிபுரம் ஸ்ரீவித்யா உபாசகர்களின் வம்சமான 'காமகோடி' பரம்பரையைச் சேர்ந்தவர்! அவர் பிறந்த போது நாள்கோள் அனைத்தும் சிறப்பாக அமைந்திருந்தன. பிறந்த தினம் அருள்தரு ஸ்ரீநிவாசப் பெருமாளுக்கு உகந்த சனிக்கிழமை என்பதாலும், முன்னோர்கள் கொண்ட பெயர் நினைவாகவும், 'சேஷாத்ரி' எனத் திருப்பெயர் சூட்டித் தொட்டிலிட்டுத் தாலாட்டி மகிழ்ந்தனர்.

ஆரம்பத்திலேயே குழந்தையிடம் தெய்வத் தன்மை காணப்பட்டது. தனது நான்காவது வயதிலேயே மூஷிகவாகன ஸ்தோத்திரம், ராமாஷ்டகம், கிருஷ்ணாஷ்டகம், மூக



மகான ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் சமாதி ஆலயம்.

பஞ்சாக்ஷரி முதலியவற்றை மனப் பாடம் செய்து விட்டார் மகான் அவர்கள்.

சிறு வயதில் தன் தாயுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு நாள் ஆலயத்திற்குச் சென்றிருந்தபோது அங்கு வெண் கலத்தில் வாாக்கப்பட்ட நவநீத கிருஷ்ண விக்ரஹங்களை விற்றுக கொணடிருந்த ஒரு வியாபாரியின் கூடையிலிருந்து ஒரு விக்ரகத்தை பூஜைக்கு வேணடும என்று கேட்டார். அந்த வியாபாரியும் ஆச்சரிய மடைந்து ஒரு விக்ரகத்தை இனு மாகக் கொடுத்து விட்டார். அன்றே அந்த வியாபாரிக்கு நூற்றுக்கணக் கான விக்ரகங்கள் விற்றுப்போயின. மறுநாள அநத வியாபாரி, ஸ்வாமி களின் காலில் விழுந்து நமஸ்கரிதது விட்டு அவருடைய கைகளைப் பிடித் துக் கொணடு 'என தங்கக் கை! என் தங்கக் கை' என்று கூவினரர்ம். அது முதல ஸ்வாமிகளுக்குத் 'தங்கக் கை சேஷாத்ரி' என்ற பெயர் நிலைத்து விட்டது. இது ஸ்வாமியின் பால லீலைகளில் ஒன்று.

தன் மகன் சேஷாத்ரிக்கு ஐந்து வயது தொடங்கியவுடன் கல்வி புகட்டத் தொடங்கினுர், அவரது தநதையார். தாய் வழித் தாத்தா காமகோடியார், சேஷாத்ரி நாவில் மந்திரம் எழுதி அடசரம் பழக்கினுர். வடமொழியிலும் தமிழிலுமாகக் காவியங்கள் தேர்ந்தார். மிகச்சிறு வயதிலேயே ஆய்வு நோக்கிலே அனைத தையும் அணுகத் தொடங்கினுர். இனிமையான குரலில் எடுப்பாகப் பாடவும தொடங்கினுர். சேஷாத்திரி யின் ஏழாம வயதில் உபநயனம் நடந் தது. வேதாத்யானம் செய்ததுடன் பற்பல சாத்திரங்களும் பயின்ருர்.

பால சேஷாத்ரி தன் பதினுனகாம் வயதில் தந்தையை இழந்தார். 'சேஷாத்ரிக்கு சன்னியாச யோகம் தான உளளது. சன்னியாசியாகி பின யோகியாவான. திருமணம் நடக்காது'' என்ற செயதியை அறிநத அவருடைய தாய் மன முடைநது போனுள்.

ஒரு நாள் சேஷாத்ரி தியானத்தில் அமாந்திருந்தபோது, சில்லென முது கில் ஏதோ ஊாவதுபோன்ற உணர்வு ஏற்பட்டது அவருக்கு. கண்ணைத் திறந்து பார்த்தார். பச்சை நிறப் பாம்பொன்று அவரைச் சுற்றிக் கொணடிருந்தது. பச்சை நிறத்தில் பற்றியது பராசகதி என அறிந்தார். 'உலகத்தின தாய் நமமைப் பற் றிக் கொணடாள், உதிரத் தின தாய நம்மை விடடு விடப் போகிருள்' என உணாநது கொண் டாா

உடல நலம குனறி மெலிந்து போயிருநத தாய, குழந்தை சேஷாத்ரி யைத் தன்னருகே அழைத்து,

ஸத்ஸங்கதவே நிஸ்ஸங்கதவம
நிஸஸங்கத்வே நிர்மோகதவம
நிர்மோகதவே நிஸ்சல தத்வம்
நிஸசலதத்வே ஜீவன முகதி:

தர்சனுத் அப்ரஸதஸி
ஜனனுத் கமலாலயே
காசயாந்து மரணுன் முகதி:
ஸமரணுத அருணுசலே

எனற இரு ச்லோகங்களையும் மகனின் மார்பில் அடித்து அடித்து மூனறு முறை சொனனுர். காமகோடி சாஸ் திரியார் இயற்றிய 'அமபசிவ' என்ற கீர்த்தனையை மகனைப் பாடச் சொல்லித் தானும் கூடப் பாடினுர். இறுதியில் 'அருணுசல, அருணுசல, அருணுசல' என மூன்று முறை உரககக் கூவி சேஷாத்ரி மடிமேல் தலை சாய்த்து இயற்கை எய்தினுர்.

தந்தை தாய் மறைவுக்குப் பின் உலகப் பற்றிலிருநது மெதுவாகத் தன்னை விடுவித்துக் கொண்டார் மகான் சேஷாத்ரி சுவாமிகள். தாய் கடைசியாகக் கூறிய அருணுசல மெனற சொல் அவாதம் அடிமன தில ஆணிவேர் ஆயிற்று. திருவண்ணு மலையைப பார்த்தறியாத சுவாமிகள், திருவணணுமலையை மனத்தால் கணடு ஐநது சிகரங்களுடன ஓர் அட்டை யில மலையை வரைந்தார். மிக்க வியப்பு என்னவென்ருல், அது மிகச் சரியாக அமைந்ததுதான்!

பூஜை அறையில் அப்படத்துடன் காமாட்சி, இராமர் படங்களை வைத்துப் பூஜித்தார். தாய்வழி தாத்தா உபதேசித்த 'ஷோடசீ' மகா

## தெரிந்து சொல்லுங்கள்!

# ஆஞ்சநேயர்

ஆஞ்சநேய வழிபாட்டினுல் ஆத்ம வலிமை கிடைக்கும். தைரியம் வளரும். வாயு மைந்தனின் உருவத்தைக் கண்ணை மூடிக்கொண்டு மனதால் தியானித்தாலே நமக்கு நம்பிக்கையும பலமும் வளரும.

கீழ்க் கணட ஸ்லோகத்தை சொல்லி தினமும் அவரை வணங்கலாம.

" புத்திரபலம் யசோதைாயம
நிரபயத்வ மரோகதா!
அஜாதயம் வாக்படுத்வம்ச
ஹனுமத ஸமராணுத் பவேத ".

சம்ஸகிருதம தெரியாதவர்கள் கீழே குறிப்பிட்டுள்ள துதிப் பாடலைப பாடி வணங்கலாம்.

" ஐநதிலே ஒன்று பெற்றுன
ஐந்திலே ஒன்றைத் தாவி
ஐநதிலே ஒன்ருருக ஆரியர்க்காக ஏகி
ஐந்திலே ஒன்று பெற்ற
அணங்கு கண்டு அயலாருரில
ஐந்திலே ஒன்று வைத்தான
அவன் எம்மை அளித்துக் காப்பான் "

திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

மந்திரத்தை உணர்சசியுடன் ஜெபம் செய்வார். சககரத்தாழ்வார் சன்னதியும் காமாட்சி சன்னதியும் தியானக் கூடங்களாயின. அடிக்கடிக் குளிப்பாா. 'மூக பஞ்ச சதி'யை விடாமல் சொல்வாா. அவ்வப்போது சேஷாத்ரி ஸவாமி சூரியனை வணங்குவார். எபபோதும் ஏதேனும் முனகிக் கொண்டிருப்பாா. எநத வீட்டிலும் உட்காருவாா. எண்ணெய் தேய்ப்பதில்லை, முகசசவரம் செய்வதிலலை. பெருமாள் திருவீதி உலாவினபோது வழியில இருக்கும் கலலை, முளளை பொறுக்கித்தூர எறிவாா. உணணக் கொடுககும உணவைக் காககை நாயகளுக்குப் போடுவார். காமா தொலைய வேணடும் என்பார். அதற காக ஜெபம செய்கிறேன எனபார்.

அரிததுவாா தொடங்கி இராமேச்வரம் வரை பயணம் மேற கொண்ட ஸ்ரீ பாலாஜி சுவாமிகள் காமாட்சி தரிசனத்துக்காக காஞ்சிபுரம் வந்தார். கண்டார் சேஷாத்ரியை! சன்யாசம் தந்து சீடராக்கினுர். அப்போது சேஷாத்ரிககு வயது பத்தொன்பது.

அந்த வயதிலேயே எல்லாவற்றையும் துணடித்துத துறவியானுர் காஞ்சிபுரத்தை விட்டுப் புறப்பட்டார். வழூர், வந்தவாசி, காவேரிப்பாக்கம், திணடிவனம், மாமணடூர், வாலாஜா, வேலூர், திருப்பத்தூர், சவவாது மலை, கணியம்பாடி, படைவீடு,ஆத்துவாம்பாடி, துரிஞ்சிக்குப்பம் ஆகிய ஊாகளின் வழியாகப் பயணம் மேற்கொண்டார். ஞானவிதையைத் தனக்குள் பரப்பிய, நாளும் தன்னை அழைத்த, ஞானத் தபோதனரை வாவென்று அழைக்கும் திருவணணுமலை வநது சேர்நதார்.

வட ஆற்காடு மாவடடத்தில பெயர் பெற்ற நகரம் திருவண்ணுமலை. பிற நாட்டவரையும் கவர்நதிழுக்கும் புணணிய பூமியும் இதுவே. சென்னையிலிருநது 186 கி.மீ. தொலைவிலும் விழுப்புரம் காட்பாடி புகைவண்டித் தடத்தில் காட்பாடியிலிருந்து 68 கி.மீ. தொலைவிலும் இந்நகர் அமைந்துளளது. கடல் மட்டததிலிருந்து 167.44 மீ. உயரத்தில அமைநதுள்ள அந்நகருக்கு முக்திபுரி, தலேச்சுவரம், சிவலோகம், சுத்த நகரம், கௌரிநகரம், சோணுசலம், சோணகிரி, சோணுத்ரி, அருணுசலம், அருணகிரி, அருணுத்ரி, அனற்கிரி, திருவருணை எனவும் பெயர்கள் உண்டு. 217 அடி உயரக் கோபுரமும் 2668 அடி உயரமலையும் அணி செய்யும் இநநகரின முக்கிய திருவிழாககள் திருவூடல் திருவிழாவும், கார்த்திகை தீபத் திருவிழாவும் ஆகும்.

அருள்மிகு அணணுமலையார் திருக கோயிலானது அகிலப் புகழ் பெற்றது. திருவண்ணுமலையின் சிறப்பினைச சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென் ருல்,

" பிறக்க முகதி திருவாரூா
தரிசிகக முகதி சிதமபரம
இறக்க முக்தி காசி
நினைக்க முகதி திருவண்ணுமலை"

எனற வரிகளையே மேற்கோளாககலாம். கிருதயுகத்தில் நெருப்பு மலையாகவும், திரேதாயுகத்தில மாணிக்க மலையாகவும், துவாபரயுகத்தில் பொன்மலையாகவும், கலியுகத்தில் கல் மலையாகவும் இருப்பது இம்மலையின் சிறப்பாகும.

இத்தகைய சிறப்புடைய திருவண்ணுமலையில் மகான் ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள் நடத்திய சித்துக்கள் ஏராளம்.

அவர் அடிக்கடிச் சிரிப்பார். சில சமயம் அரைமணியும் தொடர்ந்து சிரித்துக் கொணடே இருப்பார். வேக

மாகச் சிரிப்பார். வேகமாக நடப்பார், முன்னும் பின்னும் நடப்பார். வானத்தைப் பார்ப்பார். மழையில் நனைவார், வெயிலில் அலேவார்.

வசிகரக் கண்கள், புறக்கழுத்தில் புரளும் பம்பைச் சடை, நீண்ட புயங்கள், அகண்ட மார்பு, நரம்பற்ற கணுக்கால், சிவந்த பாதங்கள், தங்க நிறமேனி, இவற்றின் சொந்தக்காரரே நம் சுவாமிகள். இடுப்பில் சுற்றிக் கொண்ட துணி, கால் நகத்தை மறைக்கும். மேலே மூடிய மேலாடை முதுகையும் மார்பையும் மறைக்கும். 'சேறு, சகதி, குப்பைகூளம் எனப் பிரித்துப் பார்க்காமல் எல்லா இடங்களிலும் உட்காருவார். அழுக்கே இவர் உடையின் நிறம். உணவு கொடுத்தால் விரல்களால் அதைக் கிளறிவிட்டுத் தன் துணியிலேயே துடைத்துக் கொள்வார். எவரேனும் புதிய ஆடை அணிவித்து மகிழ்வர்,சிறிதுநேரத்தில் அவற்றைப் பிச்சைக்காரர்களுக்குத் தானம் கொடுத்துவிட்டு அவர்களின் கந்தையைத் தன் சீருடையாக்கிக் கொள்வார்.

நிலேயான இருப்பிடம் கிடையாது. காலில் விழுந்து வணங்குபவர்களுக்கு வசதியாக கால்களைச் சேர்த்து இடங் கொடுப்பார். தீயவர்கள் நெருங்கினல் வசை மாரி பொழிவார். எந்தப் பெண்களைக் கண்டாலும் 'என் தாய்' என்று சொல்லி வணங்குவார். அவர் இனிமையான குரலுக்குச் சொந்தக்காரர். பாட வேண்டினுல் சில வரிகள் மட்டுமே பாடி நிறுத்துவார். ஏதாவது கட்டையில் மிருதங்க ஜதி வரிசைகளை வாசிப்பார்.

ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் தூங்கவே மாட்டார். ஊரெல்லாம் உறங்கும் வேளையிலும் அவர் சுற்றிக் கொண்டிருப்பார் அல்லது தியானத்தில் இருப்பார். தூக்கமின்றி அலேயும் சுவாமி, எவராவது தூங்கக் கண்டால், 'தூங்காதே! தூங்கினல் எமன் பிடித்துப் போவான்!' என்பார். 'ஞானியாகவே விழித்திரு' என்பது அதன் பொருள்.

அன்னை பராசக்தியைக் குறித்து கடுந்தவம் இயற்றி சித்தி பெற்றவர் நம் சேஷாத்ரி மகான். தன்னைப் 'பார்வதி தேவி' என அழைத்துக் கொள்வார் திருவண்ணுமலே ஆலயத்தில் பாதாள லிங்கக் குகையில் பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி, பாலயோகியாகத் தவம் புரிந்த சமயம் அது. சில போக்கிரிச் சிறுவர்கள் கற்களை வீசித் துன்பம் விளைவித்தனர். அந்த இடத்தில் திடீரென்று எழுந்தருளி சத்தம் போட்டுச் சிரித்தார். பயந்து கொண்டு சிறுவர்கள் ஓடினர். அங்கு வந்த ஒரு பெரியவரிடம், 'என் குழந்தை உள்ளே தவம் செய்கிறுன் பார்!' என்ருர். 'உங்களுக்கு ஏது குழந்தை?' என்று பெரியவர் ஏறிட்டு நோக்கினுர். 'முன்பே நான் பார்வதி தேவி எனச் சொல்லவில்லேயா? இதோ கந்தனேப் பார்!' என்று ரமணரைக் காட்டினுர்.

பாமர மக்களும் படித்தோரும் நம் சுவாமிகளேப் 'பெரிய சேஷாத்ரி' என்றும் பகவான் ரமணரை 'சின்ன சேஷாத்ரி' என்றும் அழைத்து மகிழ்ந்தனர்.

இனிய குரலுக்குச் சொந்தக்காரரான சேஷாத்ரி சுவாமிகள் பலருக்கும் திருவாய் மலர்ந்தருளிய மொழிகள் மிகச் சிறந்தவை. 'ராமாயணம் எப்படி வாசிக்கிறது? ராமாயணம் என்பது இராமர் நடந்து காட்டிய வழி, எப்படி வாசிப்பது? நாம வாழ்ந்து காண்பிக்க வேண்டும்' என்று கூறுவார்.

'சாதி பேதம், பெண்ணுசை இரண்டையும் விட்டால் சமாதி கூடும்' என்பார். மேலும் 'இராம இராம மகாபாகோ என்று சொன்னுல் மோட்சமடையலாம்' என்றும் சொல்வார். 'சத்தியம், சாந்தி, அடக்கம், பொறுமை இவைகள்தான் ஒருவருடைய சொந்த உறவினர்கள்' என்பதை அழுத்தம் திருத்தமாய் அருளினுர் சேஷாத்ரி சுவாமிகள். 'அருணகிரி நாதரின் திருப்புகழ் மகா மந்திரம்' என்று திருப்புகழின் பெருமையை விவரித்தார். 'உன் கோபத்தைவிட்டு விடு. யாராவது அடித்தால திரும்பத் திட்டக் கூடாது; அடிக்கக் கூடாது. பல தெய்வங்களை விடு; ஒன்றையே நம்பு. ஆபததுக்கு உதவுவான் அவன்' என்றும் விவரிப்பார். பலரும் வியக்கத்தக்கவகையில் சம்ஸ்கிருத சுலோகங்களை மேற்கோள் காட்டி உபதேசிப்பது மகான் ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகளின் திருவழக்கம்.

தன் அன்னேயின் ஆசைப்படி அண்ணுமலே அடிவாரம் சேர்ந்தவர் நம் சுவாமிகள். 1889-ல் திருவண்ணுமலேயை வந்தடைந்தார். அதன்பின் நாற்பது ஆண்டுகள் அவர்தம் கால்களும் உடலும் திருவண்ணுமலேயைத் தாண்டியதில்லே. தாய் சொல்லேத் தட்டாதவர் மகான்.

1928-ஆம் ஆண்டு மார்கழி மாதத்தில் பக்தர்கள் பலர் சுவாமிகளுக்கு முகம் மழித்து, பன்னீர், பால், இளநீர் அபிஷேகம் செய்து பின்னர் கிணறு வரண்டு போகும் அளவிற்கு குடம் குடமாக நீராட்டுச் செய்தனர். அன்று மாலேயே குளிர் காய்ச்சல் கண்ட சுவாமிகள், பின்னர் நாற்பது நாட்கள் கழித்து, விபவ ஆண்டு மார்கழித் திங்கள் 21-ஆம் நாள் 1929 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நான்காம் நாள், பரம்பொருள் கலந்தார். சுவாமிகள் பிறக்கும் போது இருந்த கிரகங்கள் நிலேயே முக்தி நாளிலும் அமைந்தது மகான்களுக்கே கிடைக்கக்கூடிய மாபெரும் வாய்ப்பு.

ஸ்ரீ சேஷாத்ரி மகான் அருணேயில் சுற்ருத இடம் இல்லே. மலேவலம் வருவதன் சிறப்பினே உணர்ந்து தாமும் மலேவலம் வந்த நாட்கள் கணக்கிலடங்காது. அவருடைய

(30-ம் பக்கம் பார்க்க)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு


*தமிழாக்கம்*

**திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.**

*சிரோமணி வித்வான்*

*திருப்பதி*


பூருஷத்வாத்-புரி சேதே-(எல்லாப் பிராணிகளிடமும் தங்கியுள்ளான்) என்ற வ்யுத்பத்தியின் மூலம் எல்லாவுயிர்களின் ஹ்ருதயமாகிய குகையில் தங்கியிருப்பதனுல் என்பது இதன் முடிவான பொருள். இந்தப் புருஷத்வம் பரப்ரஹ்மத்தின் தனித் தன்மையாகும், 'மூன்று மாத்திரையளவுடைய ஓங்காரத்தினுல் பரமாத்மாவை த்யானம் செய்பவன்-முக்தியடைந்த சுத்தாத்மாவைவிட உயர்ந்தவனும் எல்லாவுயிர்களிடத்திலும் அந்தராத்மாவாய்த் தங்கியுள்ளவனும் அதனுல் புருஷனென்று சொல்லப்படுமவனுமான பரவாஸுதேவனைக் காணகிறுன்' (ப்ரச்ந 5-5) என்ற ச்ருதியினுலும், தைத்திரீயோபநிஷத்து ஆரும் ப்ரசநம் பதினேராவது அனுவாகத்தில் 'கழுத்துப்பட்டைக்குப் பன்னிரண்டு விரற்கிடைக்குக் கீழும் நாபிக்குப் பன்னிரண்டு விரற்கிடைக்கு மேலும் கீழ்நோக்கிய தாமரைமொக்குப் போல் ஹ்ருதயமென்பது உள்ளது. அதனை எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியான பரமாத்மாவின் சிறந்த இடமாக அறிய வேண்டும். அந்த ஹ்ருதயம் சிறிது மலர்ந்த தாமரை போன்றதாய் நாற்புறமும் நாடிகளால் வியாபிக்கப் பெற்றுத் தொங்குகிறது. அதன் நுனியில் நுண்ணிய துளை ஒன்று உள்ளது. அது தன்னில் ஸர்வாந்தர்யாமியான பரப்ரஹ்மம் நிலை பெற்றுள்ளது. அநத ஹ்ருதயத்தின் நடுவில் நான்கு பக்கங்களிலும் ஜவாலைகள் பரவப்பெற்ற பெரிய ஜாடராக்நி (- உணவு ஜீர்ணமாவதற்குக் காரணமான நெருப்பு) இருக்கிறது. அது எப்போதுமணையாமல் ஒலித்துக் கொண்டு உணவுப் பொருள்களைப் பிரித்து முதன்முதலில் தான உணகிறது. உள்ளங்கால் முதல் உச்சி வரையில் தான் உறையும் உடலை வெம்மையுடையதாகச் செய்கிறது. அந்த அக்நியின் நடுவில் மிக நுணணியதாய் உயர்ந்துள்ள அக்நிஜ்வாலை போல் ஜீவாத்மா விளங்குகிறது. அங்ஙனம் பளபளவென்று பிரகாசிக்கும் ஜீவாத்மா (தன்னுள்ளே கரிய திருவுருக்கொணட பரமாத்மா உள்ளதனுல்) கரிய மேகத்தை விழுங்கிய மின்னற்கொடிபோல் விளங்குமதாய், தானே விளைந்த நெல்லின் நுனி போல் நுணணியதாய் மஞ்சள் நிறமுள்ளதாய்த் தனக்கு ஒப்பில்லாததாக இருக்கிறது. அந்த ஜீவாத்மாவென்னும் அக்நிஜ்வாலையின் நடுவில் பரமாத்மா நிலைபெற்றிருக்கிறுன்' என்று-எல்லாருடலிலும்கழுத்துக்குக் கீழ் நாபியின்மேல் தாமரைமொட்டுப் போனறுள்ள ஹ்ருதயம் தலைகீழாக இருக்கிறதென்றும் அதன் நடுவில் ஜீவாத்மா இருக்கிறதென்றும் கூறி, நெருப்பின் ஜ்வாலைபோல் விளங்குகின்ற அந்த ஜீவாத்மாவின் மத்தியத்தில் பரமாதமா இருக்கிறுரென்று கூறுவதனுல் பரமாத்மா ஹ்ருதய குகையில் இருப்பது பெறப்படுதலானும், 'எல்லாப் பிராணிகளுடைய சரீரத்திலும் உள்ளே ஹ்ருதமென்னும் குகையில் இருக்கும் பரமாத்மா பிறவியும் மரணமுமில்லாதவன் ஒப்பற்றவன்' (ஸுபால-7) எனற ச்ருதியினுலும், 'அர்ஜுநா எல்லாப்பிராணிகளின் இருதயத்திலும் நான் ஆத்மாவாக இருக்கிறேன்'(கீதை 10-20') அர்ஜுனு எல்லோரும் தூண்டுகிற வாஸுதேவன் ஸகல ப்ராணிகளின ஹ்ருதய ப்ரதேசத்திலும் இருககிறுன்' (கீதை 18-61) என்றிவை முதலான ஸ்மருதிகளாலும் பரப்ரஹ்மத்திற்கு ஸகல ப்ராணிகளுடையவும ஹ்ருதய குகையில தங்கியுள்ளமையாகிய புருஷத்வம அறிவிக்கப்படுதலானும என்க. இத்தன்மை யுத்தகாண்டம் நூற்றிருபதாம் ஸர்ககத்தில் 'நீர் சார்ங்கமென்னும் வில்லையேந்திய்வர், அனைவருடைய பொறிகளையும் வசப்படுத்தும் திவ்யமான திருமேனியையுடையவர், எல்லாருடையவும ஹ்ருதய குகையிலிருப்பதனுல் புருஷனெனப் படுகிறீர், புருஷோத்தமனுமாகிறீர்' (16) என்றுள்ள பிரமன் வார்த்தையினுல இராமனுகிய விஷ்ணுவுக்குக் கூறப்பட்டு, அது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தை நிலை நாட்டுகிறது.

ச்ருதி விதித தம:பார வர்த்தித்வத:—வேதத்தின் மூலம அறியப்பட்டதான - தமஸ் என்று சொல்லப்படும் ப்ரக்ருதிக்கு மேலே உள்ளமை என்ற தன்மையினுல் என்பது இதன் பொருள். இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலேயுள்ளதாக வேதத்தின் மூலம் அறியப்படுதலால் என்பது கருத்து. ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேலேயுள்ளமை என்பது ப்ரப்ரஹ்மத்தின் தனித்தன்மையாகும்; 'தமஸ்ஸுக்கு மேலிருப்பவனும் சூரியனது நிறத்தையுடையவனுமான இம்மஹாபுருஷனை நான் அறிவேன்' (புருஷஸூ

16, உத்தரநாராயணம்-2), 'இந்த ரஜஸ் என்னும் ப்ரக்ருதி மண்டலத்தின்மேல் வசிக்கின்ற பரமாத்மாவை' (தைத்-ஸம்-2-2-2) என்றிவை முதலிய ச்ருதிகளின் மூலம் ப்ரஹ்மத்திற்கு ப்ரக்ருதி மண்டலத்தின் மேலே வசித்தல் அறிவிக்கப்படுதலால் என்க. இவ்விடங்களில் தமஸ் என்பதும் ரஜஸ் என்பதும் மற்ற இரண்டு குணங்களுக்கும் உபலக்ஷணமாய், தமஸ் ரஜஸ் ஸத்வமென்னும் மூன்று குணங்களையும்இயற்கையாகப் பெற்ற மூலப்ரக்ருதியைக் குறிப்பனவாகும்; தனிப்பட்ட தமோ குணமோ ரஜோ குணமோ ஓரிடத்திலிருப்பது பொருந்தாமையால் என்க. இத்தன்மை யுத்த காண்டம் நூற்றுப் பதினைகாம் ஸர்க்கத்தில் 'இவ்விராமன் தமஸ்ஸென்னும் ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலுள்ள ஸ்ரீவைகுண்டத்திலிருப்பவனும் எல்லோரையும் படைப்பவனும் சங்கு சக்கரம் கதை ஆகியவற்றை ஏந்தியவனுமான பரமாத்மா தான், இது நிச்சயம்' (15) என்ற மண்டோதரி வாக்கியத்தில் இராமனாகிய விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டதாய்க் கொண்டு அது அப்பிரானுக்குப் பரமாத்மாவாந்தன்மையைச் சாதிக்கின்றது; அத்தன்மை பரமாத்மாவைத் தவிர்த்து வேறெங்கும் பொருந்தாமையால் என்க.

இங்ஙனம் பரப்ரஹ்மத்திற்கேயுரிய தன்மைகளை இராமாவதாரம் செய்த விஷ்ணுவினிடத்தில் கூறுவதன் வாயிலாக அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தைச் சாதித்து வருகின்ற வால்மீகி முனிவர், இராமனாகிய விஷ்ணுவைப் பிரமன் முதலியோர் பரப்ரஹ்மமென்று சொல்லிய சொல்லைக் குறிப்பிடுவதன் வாயிலாகவும் அதைச் சாதிக்கிறாரென்று குறிப்பிடுகிறார் நூலாசிரியர் 'ப்ரஹ்மேதி' என்று தொடங்கி.

ப்ரஹ்ம இதி அம்போஜயோநி ப்ரமதபதிமுகை: நிர்ஜரை: ஸ்பஷ்டம் உக்தே: - தாமரையிற் பிறந்த பிரமன் பிரமத கணத்தலைவனான சிவன் முதலிய தேவர்களால் இராமனாகிய விஷ்ணு பரப்ரஹ்மம் என்று விளக்கமாக (=இது வரையில் கூறிய படி காரணங்களின் வாயிலாகவன்றி நேராக ப்ரஹ்மமென்று சொல்லாலேயே) சொல்லப்பட்டதனாலென்பது இத்தொடரின் பொருள். ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் நூற்றிருபத்திரண்டாம் ஸர்க்கத்தில் 'இந்திரனும் இம்மூவுலகத்தவரும் ஸித்தர்களும் பரமருஷிகளும் மகாத்மாவாய்ப் புருஷோத்தமனாகிய இராமனை எதிர்கொண்டு பூசிக்கின்றனர். வேதத்தின் உட்கருத்தாய் வேதாந்தங்களில் மறைந்ததாய்ப்பக்தியில்லாதவர்களால் அறிய முடியாததாய் உருவத்தாலும் குணத்தாலும் எவ்வித மாறுதலுமில்லாததும் மிகப் பிரசித்தமுமான ப்ரஹ்மமே பகைவரைத் தபிக்கச் செய்யும் இராமனுருவங் கொண்டு அவதரித்ததென்று பிரமன் முதலியோர்கள் என்னிடம் கூறினர்' (31, 32) என்று தசரதன் வார்த்தை அமைந்துள்ளது. இதில் இராமனாக அவதாரம் செய்த விஷ்ணுவைப் பிரமனாதியர் பரப்ரஹ்மமாகக் கூறியுள்ளமை மிகவும் விளக்கமாக உள்ளது.

இங்ஙனமே நூற்றிருபதாவது ஸர்க்கத்தில், எல்லாத் தேவர்களாலும் முன்னிடப் பெற்ற நான்முகன் ஸ்ரீராமனிடம் அவனது முன்னைய நிலையைக் கூறுந்தருணத்தில் 'நீர் திருமகளோடு இணைபிரியாது சக்ராயுதமேந்தி எங்கும் நிறைந்துள்ள நாராயணப் பெருமாளாவீர். ஒரு கோடுடைய வராகமாம் அவதரித்து பூமியை மேலெடுத்தவரும் நீரே. இது வரையில் இருந்த பகைவரான மது கைடபாதிகளை வென்று இனித் தோன்றும் சிசுபாலாதிகளையும்வெல்லுமவரும் நீரே' (14, 15) என்று நேரே இராமனைப் பார்த்துக் கூறியதும் இங்குக் கருதப்பட்டதாகும்.

இங்கு நான்முகக் கடவுள் தன்னுடைய கருத்தை மட்டும் கூறவில்லை. பின்னையோவெனில் சசீபதி உமாபதி முதலான எல்லாத் தேவர்களுடைய கருத்தையுமே கூறினர். ஆகையால் தான் 'பின்பு குபேரன் பகைவரை வாட்டும் யமதருமன் ஆயிரங்கணனுடைய இந்திரன் மாற்றாரைத் தபிக்கும் வருணன் எருத்துக் கொடியுடையானும் முக்கணனும் நன்மனச செல்வனுமான மகாதேவன், எல்லாவுலகையும் படைப்பவனாய ப்ரஹ்மத்தையறியுமவர்களில் தலைவனாகிய பிரமதேவன ஆகிய இத்தேவர் பெருமக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து சூரியன்போல் விளங்கும் விமானங்களின்மூலம் இலங்கை நகருக்கு வந்து இராமபிரானெதிரில் நின்றனர் கை கூப்பி நிற்கும் இராமனைக் குறித்து இங்ஙனம் கூறினர்' (2-5) என்று இந்திரன் சிவன் யமன் வருணன் நான்முகன் முதலியோர் இலங்கைக்கு வந்து இராமபிரானை எதிர்கொண்டதும், 'எல்லாவுலகங்களையும் படைக்கும் காத்தாவாகவும் எல்லோரையும் விட உயர்ந்தவராகவும் அறிவாளிகளுக்குள் மிக மேம்பட்டவராகவும் நீர் இருக்கிறீர். உலகனைத்துக்கும் முதற்காரணமாகவும் நீர் இருக்கிறீர்' (17), 'நீர் மூவுலகினையும் முதன் முதலில் படைத்தவராவீர், உலகிற்கு நீரே தலைவர், உமக்கு வேறோர் தலைவரில்லை' (20) என்று அத்தேவர்கள் இராமபிரானிடம் கூறியதாக முன்னே காட்டியதும் பொருந்துகிறது. அதனால்தான் 'லோகபாலர்களான முற்கூறிய இந்த்ராதி தேவர்களால இங்ஙனம் கூறப்பட்டு, உலகிற்குத் தலைவனும் தருமத்தை வளர்ப்பவனும் ரகுகுலத்து திலகனுமான இராமன் அத்தேவர் பெருமக்களைக் குறித்துக் கூறினன்' (11) என்று தொடங்கி இராமபிரான எல்லாத் தேவர்களிடமும 'என்னை நான் தயரதன் மகனான மனிதனாக நினைத்திருக்கிறேன்' (12) என்று கூறிய பின்பு பிரமதேவன் ஒருவன் மட்டுமே அதற்குப் பதிலளிக்கத் தொடங்கியதாகக் கூறப்பட்டுள்ளதும் பொருந்துகிறது இல்லையெனில், எல்லாத்

தேவர்களும் சேர்ந்தே பதிலளிக்க வேண்டியிருக்கப் பிரமன் மட்டும் பதிலளிப்பது பொருந்தாமறபோய் விடுமன்றோ? ஆகையால் சிவன் இந்திரன் முதலோரால் தூண்டப்பட்ட நான்முகன் கூறிய 'நீர் நாராயணப் பெருமாளாவீர்' என்றிந்த வாக்கியமும் எல்லாருடைய வாக்கியமாகவே முடிவு பெறுவதனுல் தேவர்கள் அனைவராலுமே இராமனுக்குப் பரப்ரஹ மத்துவம் சொல்லப்பட்டதாகிறது

ஆகமாந்தோதித பரமமஹத்த்வ ஆச்ரயத்வாத் — (பரப்ரஹ்மத்தின் தன்மையாக) வேதாந்தங்களான உபநிஷத்துக்களால் கூறப்பட்ட பரம மஹத் பரிமாணத்துக்கு (—எல்லாவற்றையும் விடப் பெரிய அளவுடையதாயிருக்கும் தன்மைக்கு) இடமாயிருப்பதனுல் என்பது இதன் பொருள். பரம மஹத்பரிமாணமுடைமையோவெனில் பரப்ரஹ்மத்தின் தருமமாகும்; 'உயர்ந்த எல்லாவற்றையும் விட உயர்ந்ததும் பெரிய பொருள்கள் அனைத்தையும்விடப் பெரியதுமான பொருளை ப்ரஹ்மமென்று கூறுவர் பெரியோர்' (தைத்-நாரா-5) 'அணுப்பொருள்கள் அனைத்தையும் விடப் பெரிய பரமாத்மா' (தைத்-நாரா-66) என்றிவை முதலிய ச்ருதிகளாலும் மற்றுமுள்ள ஸ்ம்ருதிகளாலும் அங்ஙனம் அறியப்படுதலாலும், 'எக்காரணத்தால் இது பெரியதாயிருந்து தன்னையடைந்தாரையும் பெரியவராக்குகிறதோ அக்காரணத்தால் இது பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது' (ச்ருதி?) என்ற-ப்ரஹ்ம சப்தத்தின் நிர்வசனத்தாலும் விவரணத்தாலும்), 'தான் பெரிதாகையாலும் தன்னைப் பற்றினரைப் பெருமையுறச் செய்வதனுலும் அது ப்ரஹ்மமென்று கூறப்படுகிறது' (?) என்ற ஸம்ருதியாலும் அப்படியே அறிவிக்கப்படுதலாலும் என்க.

இத்தகைய பரமமஹத் பரிமாணமுடைமை யுத்தகாண்டம் நூற்றுப் பதினன்காம் ஸர்க்கத்தில் 'இவவிராமன் பிறப்பு - வளர்வு - இறப்புகளில்லாதவன், பெரிய பொருள்கள் அனைத்தையும் விட மிகப் பெரியவன்' (14) என்று இராமனுகிய விஷ்ணுவின திறத்தில் கூறப்பட்டு அது அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தை அறிவிக்கின்றது. (ஆக 15, 16 ஆகிய இரண்டு ச்லோகங்களினுல் யுத்த காண்டத்தில் பத்தொன்பது காரணங்கள் கூறப்பட்டனவாயின.)

இவ்விதமாக ஆறு (ஐந்து?) காண்டங்களில் விஷ்ணுவுக்குப் பரத்துவத்தை அறிவிக்குமவையாயுள்ள காரணங்களைத் தொகுத்துக கூறி, இனி உத்தரகாண்டத்திலுள்வற்றைத் தொகுத்துக கூறுகிறர்—'மால்யாதீநாம்' என்றும், 'ஸர்வேப்ய.' என்றும், தொடங்கும இரண்டு ச்லோகங்களால்.

ஸலோகம் 17, 18:

மால்யாதீநாம் ஹராப்ஜாஸந விபுதாவத்ய ராத்ரிஞ்சராணும், தேவாரீணும் வதாதம்புஜபவஜநகத்வாத் ததாபத்விநாசாத் | ருத்ரேண ஸ்பஷ்டமேவ ப்ரபுரிதி கதநாத் ப்ரஹ்மணேபாஸயதோக்தே:, தேவாநாமீச்வரத்வாத் ஸகலஸுரகணைரர்ச்சிதத்வாத் ஸ்துதத்வாத் ||

ஸர்வேப்ய: பூர்வஜத்வாத் அத ஸகலஜகத்காரணுகாசபாவாத், ஸேந்த்ரைர் தேவைரசேஷை: ஸததமபி ஸமாராதநீயத்வத: ச | அந்த்யே காண்டே மூநீந்த்ர: கவிகுலதிலக: ப்ராஹ வல்மீக ஜந்மா, ராமாகாரம் முராரிம் ஸ்ப்புடமிஹபரமம் ப்ரஹ்ம வேதாநதவேத்யம் ||

பதவுரை:

ஹர அப்ஜாஸநமுக விபுத அவத்ய ராத்ரிஞ்சராணும் = சிவன் பிரமன் முதலிய தேவர்களால் வதைக்க முடியாத அரக்கர்களாயும், தேவ அரீணும்=தேவர்களுக்குப் பகைவர்களாயுமுள்ள, மாலீ. ஆதீநாம்=மாலி முதலியவர்களை, வதாத்=கொன்றமையினுலும், அம்புஜபவ ஜநகத்வாத்= தாமரையோனுன பிரமனைப் பிறப்பித்ததனுலும், தத் ஆபத் விநாசாத்= அப்பிரமனுடைய ஆபததைப் போக்கியதனுலும், ருத்ரேண ஸ்பஷ்டமேவ ப்ரபு: இதி கதநாத்=சிவபெருமானுல் ஸ்பஷ்டமாகவே விஷ்ணு ப்ரபு (=தலைவர்) என்று சொல்லப்பட்டபடியினுலும், ப்ரஹ்மணு உபாஸ்யதா உக்தே:=பிரம தேவனுல் விஷ்ணுவுக்குத் தன்னுல் த்யானம் செய்யப்படுந்தன்மை கூறப்பட்டபடியினுலும், தேவாநாம் ஈச்வரத்வாத்=தேவர்களுக்கு அதிபதியாயிருப்பதனுலும், ஸகல ஸுர கணை:=கூட்டங்கூட்டமாக உள்ள எல்லாத் தேவர்களாலும், அர்ச்சிதத்வாத்=பூசிக்கப்பட்டதனுலும், ஸ்துதத்வாத்=துதிக்கப்பட்டதனுலும், ஸர்வேப்ய: பூர்வஜத்வாத்=எல்லோரைவிட முன்பே தோன்றியதனுலும், ஸகல ஜகத் காரண ஆகாசபாவாத்=எல்லாவுலகுக்கும் காரணமான ஆகாசமாயிருப்பதனுலும், ஸேந்த்ரை: தேவை: அசேஷை:=இந்திரனுள்ளிட்டதேவர்கள் அனைவராலும், ஸததமபி=எப்போதுமே, ஸமாராதநீயத்வத:= ஆராதிக்கத் தக்கமையினுலும், அந்தயே காண்டே=இறுதியிலுள்ள உத்தரகாண்டத்தில், கவிகுல திலக:= கவிகளின் திரளுக்குத் திலகமானவரும், வல்மீக ஜந்மா=புற்றில் உதித்தவருமான, முநி இந்த்ர:= முனிவர் பெருமான் (வால்மீகி) ராம ஆகாரம் முராரிம்=இராமனது உரு வந்தரித்த திருமாலை, வேதாந்த வேதயம் பரமம் ப்ரஹ்ம=உபநிஷத்துக்களால் அறியத்தக்க மிகவுயர்ந்த ப்ரஹ்மமாக, ஸ்ப்புடம்=ஸ்பஷ்டமாக, ப்ராஹ=கூறியருளினர்.

(தொடரும்



# சித்திரத் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. * சித்திரம் : சசி.

## 23. பூவைப் பூவண்ணா !

கருமுகில் ஒருங்கே திரண்டு பொழியும், மழைத் துளிகள் புக முடியா பெரு மலைக்குகையிலே படுத்துத் கிடந்து, உறங்கிய பின், வீரமும் வீரியமும் கம்பீரமும் ஒருங்கே உருவான ஆண்மை செறிந்த சிங்கமானது, தன் உறக்கம் தெளிந்து, தீப்பிழம்பு அனல் பறக்க-தன் கணகளை விழித்துக் கொணடு - பிடரிமயிர் சிலிர்த்துக் கொண்டு, கம்பீரமான நிமிர்நது நின்று கர்ஜனைபுரிந்து குகையிலிருந்து வெளி வருவது போல...காயாம் புஷ்பம் போன்று கருநீல நிறத்தை உடைய பூவண்ணா!-நீயும் உன்னுடைய திருக்கோயிலான உன் மாளிகையி லிருந்து, புறப்பட்டு நாங்கள் குழுமியுள்ள இவ்விடத்திற்கு எழுந்தருளி மிக அழகிய சித்ர வேலைப்பாடுகள் ஒளிரும் மிகச்சிறந்த இந்த ஸிம்ஹாஸ தனத்தில் வீற்றிருந்து உனைநாடி வந்த செயலினை என்ன என்று வினவி- ஆராய்ந்து-அதற்கு ஏற்றபடி திருவருள் புரிவாயாக!' என்று கண்ண பிரானிடம், தன் மனம மொழி மெய்யால், கண்களிகூற நுண் துளி அரும்பக் சூடிக் கொடுத்தச சுடர்க் கொடியாள் விண்ணப்பித்துக் கொள் கிருள்.

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்க எப்பாடும பேர்ந்துதறி
மூரி நிமிாநது முழங்கிப புறப்பட்டுப்
போதருமா போலே, நீபூவைப்பூ வண்ணா! உன்
கோயிலநின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரியசிங்கா சனத்திலிருந்து யாம்வந்த
காரியம ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய்!

'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கிக் கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத்துயிலும்' கணணபிரான் தன் மாளிகையில் கோட்டுக் கால் கட்டில்மேல், மெததென்ற பஞ்ச சயனத்தின் மேலே படுத்த வண்ணமே கேட்டருளினன், 'உங்களுக்கு நான் செய்ய வேண்டியது என்ன?' என்று. அது கேட்ட பாவையர்களோ, 'திருவே எம்பெருமானே! எங்களுடைய விண்ணப்பம் இவ்வாறு மிக இரகசியமாகத் தெரிவிக்கக் கூடியது அல்ல. யானையின் தந்தங்களால் புனையப்பட்ட உன் திருப்பள்ளி கட்டிலிலிருந்து முதலில் எழவேண்டும்; எழுந்து கருணை கூர்ந்து உன் ஆஸ்தான மண்டபத்திற்கு வருகை தந்து இங்கேயுள்ள பொன்னிற அணிபணி புனைந்த ஸிம்ஹாஸனத்தில் கம்பீரமாய் வீற்றிருந்து, எங்களது விஞ்ஞாப னத்தை விசாரித்தருள வேணடும்' என்று கனிவோடு விணணப் பித்தனர். ஏன்? திருப்பள்ளி அறையில், சொத்தலர் பூங்குழல நப்பின்னை கொங்கைமேல் வைத்துக கிடக்கும்' மலர் மார்பன்! வாய் திறவான்!... இது தெரியாதா-பாவையர்கட்கு? அதனால் 'நீ இங்கு எழுந்தருள வேண்டும்' என்கின்றனர். அதுவும் எப்படி வரவேண்டும? குகையிலிருந்து வீறு கொண்டு வீர்யத்துடன் வரும் சிங்கம்போல வரவேண்டும் என்கின் றனர்.

உயிர்-உடல்-பொருள்-மொழி-விழி யாவுமே 'பகவானே' என்று அதிதீவிர நிலையில் உள்ள பாகவதர்களின்-அடியவர்களின்-விருப்பத்தை நிறைவேற்ற இறைவனே இதயம கனிந்து தானே முந்தி வந்தருள்வான் என்பதே இப்பாசுரத்தின் 'கரு'வாகும்.

தர்மம், அதர்மம், ஞானம், அஞ்ஞானம், வைராக்கியம், அவைராக் கியம், ஐசுவரியம, அநைசுவரியம் என்கிற எட்டு திருக்கால்களை உடையது தர்மாதி பீடம். இஃது பரமபதத்தில் உள்ளது என்பர் ஆன்றோா அதே ஆசனம் இங்கு ஸ்ரீ பகவானுக்கு ஸிம்ஹாஸனமாக உள்ளது என்பா சான் றோர். 'யார் தருமத்தில் ஞானத்தில், நேர்மையில், நீதியில் இருந்து பிறழ்ந்து, அதர்மத்தில், அநீதியில், அஞ்ஞானத்தில் நுழைந்து செயல் படுகிறார்களோ அவர்களுக்கு ஸ்ரீ பகவான்-சிங்கம் போல... தீவிழித்துப் பிடரிரோமம் சிலிர்க்க, நாலாபுறமும் அசைந்து கொடுத்து உடம்பை உதறி, கம்பீரமாய், வீர கர்ஜனையிட்டுத் தன் குகையிலிருந்து வெளிவரும் சிங்கம் போல பொங்கி எழுந்து வருகிறார்'...என்கிறாள் ஸ்ரீ கோதை. வாழ்க்கைக் கடலில் இருந்து தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்கிறாள்.

அக்கரை என்னும் அனததக கடலுள் அழுந்திஉன் பேரருளால்
இக்கரை ஏறிஇளைத்திருந்தேனை அஞ்சேல் என்று கைகவியாய்
சக்கர மும்தடக் கைகளும் கண்களும் பீதக ஆடையொடும்
செக்கர் நிறத்துச் சிவப்புடையாய் திருமாலிருஞ் சோலை எந்தாய்.

என்று ஸ்ரீ பகவானை பெரியாழ்வார் போற்றுவது, ஸ்ரீகோதையுடைய நெஞ்சத்தைத் தெள்ளத் தெளிவாகக் காட்டிடும் பளிங்கு போன்றதாகும். உண்மையான பகதியினை ஸ்ரீபகவான் மேல் யார் வைக்கிறார்களோ, அவர் களுக்காக இறைவனே எழுந்து அவர்கள் அருகில் வருவான்; அவர்களது குறைகளைப் போக்கித் திருவருள்புரிவான்.

# 24. திருவடி போற்றி !

"தரும்த்தை நிலைநிறுத்தவும், மஹாபலியின் செருக்கை-ஆணவத்தை அடக்க இந்த உலகங்களை எல்லாம் உன் திருவடிகளினுலை அளந்தவனே! உன் வண்ணத் திருவடிகள் பல்லாண்டு வாழ்க!

பெண் ஆசையால தருமத்திலிருந்து பிறழநத இராவணன் இருக்குமிடம் சென்று தெனனிலஙகை அரககர்களை அழித்து அருள்புரிந்தவனே உன் ஆற்றலைப் போறறுகிறேம! உன் ஆற்றல் வாழ்க!

கணணு! உன்னை ஒழிக்க வேணடும் என்ற ஆசையோடு வண்டிச் சக்கரமாய் உருண்டோடி வநத சகடாசுரனை, அவன் உயிர் அவனது உடலை விட்டுப் பிரியுமபடி உதைததருளியவனே! உன் புகழைப் போற்றுகிறேம்;

கார்முகில் வண்ணு! உனனை அழிக்க வேண்டும் என்ற ஆசையோடு ஆவின் கன்று உருவாக வநத வத்ஸாசுரனை ஒரு பெரும் பாறுங்கல் போலத் தூக்கிச் சுழற்றி, எதிரே வானுயர ஓங்கி வளர்ந்து விளாமரமாக நின்ற மற்றொரு அசுரன்மீது வீசி யெறிந்து இருவரையும் கண்ணிமைக்கும் நேரத்தில் அழித்தொழித்தவனே, உன்னுடைய திவ்வியத் திருவடிகளைப் போற்றுகிறேம்!

ஆயர்பாடியையே, இடிமழை பெரு வெள்ளத்தில் ஆழ்த்தி, அழித்துவிட வேண்டும் என்ற பேராசையோடு பெரு மழையாய் வந்த இந்திரன்-வருணன் இவர்களை அடக்கிட, கோவர்த்தன கிரியையே குடையாகத் தூக்கிப் பிடித்து அனைத்து உயிர்களையும் காப்பாற்றியவனே! உன் கருணைமிக்க குணத்தினைப் போற்றுகிறேம்.

நீதி, ஸத்யம் இவற்றில் பிறழ்ந்து, பேராசை, பொறுமை கொண்டு தீயநெறியில் நிற்கும் விரோதிகள் எவராயினும் அவர்களை அக்கணமே, வென்று வெற்றி கொள்ளும் உன் கையிலுள்ள வேலினைப் போற்றுகிறேம்!

என்றென்றும் உன்வீரமிக்க - போற்றுதலுக்குரிய உன் திருவருள் தரும் புகழையே, உன் கருணை தரும் வலிமையை நாங்கள் புகழ்ந்துப் போற்றி பாடி, வணங்கி வருகிறேம்! என்றைக்கும் உனக்குச் சேவகம் செய்யவே இருக்கின்றேம். எங்களுடைய வேண்டுகோளை ஏற்பாயாக. அதற்காகவே நாங்கள் இங்கு வந்து நிற்கின்றேம் உன்சந்நதியில். திருவருள் புரிவாயாக" என்று ஸ்ரீ ஆண்டாள் பகவானிடம் கனிந்து பணிந்து வேண்டுகிருள்.

அன்றிவ் வுலகம் அளந்தாய்! அடிபோற்றி!
சென்றங்குத் தென்னிலங்கை செற்ருய்! திறல்போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய்! குணம் போற்றி!
வென்று பகைகெடுககும் நின்கையில் வேல்போற்றி!
என்றெனறுன சேவகமே ஏத்திப்பறை கொளவான்
இனறுயாம வநதோம் இரஙகேலோ ரெம்பாவாய்'

நங்கையாகள் கனிவான வேணடுகோளுக்கு, இதயம் கனிந்து இணங்கி, ஸ்ரீ கண்ணபிரான தன்னுடைய திருப்பளளி மாளிகையிலிருந்து அருளுளம் கொண்டு, வெளிமணடபத்திறகு வருகிறுன். அந்த நடையழகு-அந்த உடையழகு-அந்த கம்பீரத் தோற்றமழகு கணணுல் கணடதுமே, கன்னியாகள் தாம் வநதக காரியத்தை மறந்து விடுகின்றனரன்றே? முதனமுதலில்-அந்த நடையழகைக்கண்டு நாமணக்கப் பல்லாணடுப் பாடுகின்றனர். முதன்முதலில் பகவானின் அருவமான திருஉருவின் 'பேருருவின் பெருவடிவை' எடுத்துக் காட்டிப் போற்றிப் புகழ்ந்துத் திருவடிகளை வணங்குகின்றனர்.

உண்மையான அன்பும், ஆழமான பற்றும், சலன மற்ற பக்தியும் கொண்ட இருவர் ஒருவரை ஒருவா பார்க்குமுன இது கேட்க வேண்டும் அது கேட்க வேண்டும்' என்று நினைப்பார்கள். பார்த்தபின் எல்லாம் மறநது போய்விடும். அவ்வாறே கண்ணனைக் காணும்வரை 'அதுவேணும், இதுவேணும்' எனறு கேட்க தோனறுமாம. கணணனைக் கண்ணுல் கணடதும் அவ்ன் அழகிலேயே மெய்மறநது அவனையே போற்றிக் கொண்டிருக்கத் தோன்றுகிறது, கன்னியர்களுக்கு.

இந்தப் புகழைப் போற்றியதும்-அவன் கையில் உள்ள வேல் நினைவுக்கு வருகிறது. அந்த 'வேல்' சாதாரண வேலா? கொடியவர்களைக் கொன்று-அதர்மத்தை அழித்து-நல்லவர்களை வாழவைக்கும்-தர்மத்தை நிலைநிறுத்தும் 'வேல்' அது. எனவே அதனைப் போற்றுகின்றனர்.

'அடிபோற்றி-திறல் போற்றி-புகழ் போற்றி-கழல் போற்றி-குணம் போற்றி-வேல் போற்றி' என்று நாமணக்க வணங்கிப் போற்றிய பின் 'உன் அருளைப் பெறுவதற்காக நாங்கள் இங்கு வந்துவிட்டோம். அதைப் பொறுத்து நீ மனம் இரங்கி திருவருள் செய்ய வேணடும்' என்று சூட்டோடு சூடாக தாங்கள் வந்த நோக்கத்தினையும் அப்படியே நினைவுறுத்தி வேண்டுகின்றனர். இவர்கள் கருத்தையே பெரியாழ்வாரும்,

வண்ணமால் வரையே குடையாக மாரிகாத் தவனே! மதுசூதா!
கண்ணனே கரிகோள் விடுத்தானே! காரணு களிறுஅட்ட பிரானே!
எண்ணுவார் இடரைக் களைவானே! ஏத்தரும் பெருங்கீர்த் தியினுனே,
நண்ணிநான் உன்னை நாடோறும் ஏத்தும் நன்மையே அருள்செய்
எமபிரானே!

என்று போற்றிப் புகழ்ந்து வணங்குகிருர்.

# ஆறுவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு

கடந்த ஆண்டு நவம்பர் மாதம் 15 விருநது 19 வரை ஆகிய 5 நாட்கள் மலேசிய நாட்டின் தலைநகராகிய கோலாலம்பூரில் ஆறுவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு கோலாகல மாக நிகழ்ந்தது. மாநாட்டுத் திறப்பு விழா புத்ரா உலக வாணிப மையத் தில் (Putra World Trade Centre) 15-11-87 ஞாயிறு காலை 9 மணி அளவில் மலேசிய நாட்டுப் பிரதமர் யாப் தத்தோ செரி டாக்டர் மகா தீர் முகமது அவர்களால் தொடங்கி வைக்கப்பெற்றது. பன்னாட்டு அறி ஞர்களுடைய வாழ்த்துரை பல அந்த விழாவில் இடம் பெற்றது.

பின்னர் கருத்தரங்குகள் யாவும் மலாயாப் பல்கலைக்கழக வேந்தர் துங்கு மண்டபத்திலும், பல்கலைக் கழக விரிவுரை மணடபங்களிலும் நிகழ்ந்தன. மொழியியல், இலக்கி யம், சமுதாயம், பண்பாடு, அறிவி யல் ஆகிய பொருள்களில் அமர்வுகள் பல ஏற்பாடு செய்யப்பெற்றிருந் தன. இலக்கியம், சமுதாயம், பண் பாடு ஆகிய அமர்வுகளில் சமயம் பற்றிய கட்டுரை பல இடம் பெற்றி ருந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக் கன சஙககாலத் தமிழ் மக்களின் சம யப் பொதுமை, திருமுருகாற்றுப் படையின் சமுதாய, தத்துவச் சிந் தனைகள், தற்காலமும் சைவ சமயமும், மணிமேகலைக் காப்பியத்தில் இடம் பெறும் இந்திய தத்துவ ஞான விவா தம், திருக்குறள் தத்துவ, கட்ட மைப்பு-நடையியல் ஒப்பியல் நோக் கில் - திருவள்ளுவர் ஓர் ஒழுக்க இயலார் - திருக்குறளும் உலகக் கோட்பாடும், இளஙகோ வடிகள் வலியுறுத்தும் சமய, சமுதாய, அரசியல் கொள்கை கள், தொல்காப்பியத்தில் சமயம், திருமுருகாற்றுப் பாடலில் வேலன் வழிபாடு, வள்ளலார் ஒளிவடிவம் பெற்றது, அருட்பெருஞ்சோதி தத் துவ விளக்கம், அணணல் பாம்பன் சுவாமிகளின் சமுதாய உணர்வு, தமிழ்ப் பண்பாட்டு வளர்ச்சியில் காஞ்சி காமகோடிபீடத்தின் பங்கு, திருமூலர்காட்டும் கருவும் உருவும, அப்பர் பாடிய திருக்கடைக்காப்பு, முதலாழ்வார் பாடல்களில் திருமா லின் அவதாரங்கள், திருவிளையாடல் புராணத்தில் பரஞ்சோதியார் உல கிற்கு உணர்த்தும் செய்திகள், மெய்கண்ட சித்தர்களும் தமிழ்ப் பாடல்களும், பாரதியின் குயில் பாட்டில் தத்துவம்—ஓர் அறிமுகம், எண்பதுகளில் வந்த தமிழ்ப் படைப்பு இலக்கியங்களில் அறம், ஒழுக்கம், நீதி முதலியன, இந் தோனீசியாவில் தமிழ்ச் சமயத்தின் தாக்கம் ஆகிய கட்டுரைகள் இடம் பெற்றன.

தாய்லாந்து மன்னர் முடிசூட்டு விழா முதலிய நிகழ்ச்சிகளில் திருப் பாவை, திருவெம்பாவை இடம் பெறும் உண்மையும் விளக்கம் பெற் றது. மலேசியாவில் புகழ் பெற்ற கோயில்களாகிய பினாங்கு ஸ்ரீராமர் ஆலயம், பட்டர்வொர்த் ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம், தைப்பிங் இந்து தேவாலய சபா, ஸ்ரீ நாகமுத்து மாரியம்மன் கோயில், கோலாலம்பூர் ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் ஆகி யன பேராளர் கண்டு காணும் வாய்ப்பு அளிக்கப் பெற்றது. இங் குள்ள கோயில்கள் எல்லாம் நம் திரு மலைத் திருவேங்கடவன் கோயில் போல துப்புரவோடும், தெய்வீகத் தன்மையோடும் விளங்குகின்றன. மேலும் இக்கோயில்கள் இந்திய சமு தாய மையங்களாகவும் அமைகின் றன. ஆகம நெறியில் வழிபாடுகள் இங்கு இடம் பெற்றுள்ளன. மாறி மருவி வரும் தற்கால இந்திய சமு தாயத்திற்குத் துணை செய்யும் வகை யில் நம் திருமலை திருப்பதி தேவஸ் தானத்தால் இங்குள்ள பினாங்கு, ஈப்போ, கோலாலம்பூர், சிங்கப்பூர், இந்தோனீசியா, மொரீசியஸ் முத லான தீவு பலவற்றில் தனித்து விடப்பட்ட இந்திய இந்து சமயத் திற்கு ஆதரவாக இந்து சமய மையங்கள் தோற்றுவித்து, சம்ஸ்கிரு தம், இந்தி, தமிழ், தெலுங்கு, கன்ன டம், மலையாள மொழிகளில் அமைந் துள்ள தெய்வீகப் பாடல்களைக் கற் பிக்கும் வாய்ப்பினை அளித்தல் உட னடியாகச் செய்ய வேண்டிய திருப் பணி என்ற கருத்து இந்தப் பயணத் தில் என் நெஞ்சில் தோன்றிய உணர் வாகும்.

டாக்டர் பொன் சௌரிராஜன் - திருப்பதி.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்யாயம் — 18.

பகுதி — 16.

சமூகம் என்பது ஒரு பெரிய தேர் என்றால், டாக்டர்கள், வக்கீல்கள், எஞ்ஜினியர்கள், தொழிலாளிகள், உழவர்கள் போன்றோர் அந்தத் தேரின் பற்பல பாகங்களாகின்றனர். பற்பல பாகங்கள் சேர்ந்து ஒரு தேர் உருவாவது போல சமுதாயத்தின் பல தரப்பட்ட மக்களின் ஒத்துழைப்புடன் ஒரு சமூகம் முன்னேறுகிறது.எல்லோரும் தத்தம் நிலையில் பெரியோர்களேயாவர். சமுதாயம் நன்னிலையில் முன்னேற வழி வகை செய்யும் தரமான பொருட்களை மலிவு விலையில் உற்பத்தி செய்து அளிப்பது, கால் நடைகளைக் காப்பது, உழவுத் தொழிலைத் திறம்படச் செய்வது, நேர்மையான வாணிகம் செய்வது ஆகியவை வைசியர்களின் இயல்பான கர்மங்களாகும்.

நான்காவது வர்ணத்தாராகிய சூத்திரர்களது பணி சமுதாயம் முன்னேற மேற்கூறப்பட்ட மூன்று வர்ணத்தாரது வேலைகள் நீங்கலாக, இதர பணிகள் இடப்படுகின்ற பொழுது அவற்றைச் செவ்வனே செய்வதேயாகும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதுதான் உண்மையான சூத்திரரது கர்மமாகும். ஒரு வகையில் பார்த்தால் ஊதியத்துக்கு வேலை செய்யும் நபர்கள் அனைவருமே சூத்திரர்களாவர்.

ஊதியத்தைப் பெரிதுபடுத்தாது தனக்கு வாய்த்த பணியை அரசாங்கத்தில் செவ்வனே ஆற்றுபவர்கள் க்ஷத்திரியர்களாகிறார்கள். மாறாக, ஊதியத்தைப் பெரிதுபடுத்தி அதற்காகவென்றே உழைக்கும் அனைவரும் சூத்திரர்களாகின்றனர். இந்தக் கண்ணோக்கில் பார்த்தால் இன்று நம்மிடையே பெரும்பாலோர் நான்காம் வருணத்தாரின் நிலையிலேதான் இருக்கிறோம் என்பது புலனாகும். 'பரிசாரகன்' என்ற பதத்திற்கு 'இட்ட பணியைச் செய்பவன்' என்பது பொருள். இன்று நமது அரசாங்கப் பணிகள் பல I.A.S., I.F.S., I.R.S., என்று Service என்ற வார்த்தையுடனேயே முடிகின்றன அல்லவா; அவை அனைத்தும் மக்களுக்குப் பணியாற்றுவது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டவையாகும்.மேலான லட்சியம் எதுவும் கொள்ளாது, உடல் வாழ்க்கை ஒன்றில் மட்டுமே இலட்சியமாயிருப்பவன் சூத்திரன் ஆகிறான். மாறாக சமூகத் தொண்டு, பொதுநலம், இறை நாட்டம் ஆகியவற்றை இலட்சியமாகக் கொள்ளுமளவு ஒருவன் வைசியன், க்ஷத்திரியன், பிராம்மணன் என்று படிப்படியாக மேல் நிலையை அடைகிறான்.

நான்கு வர்ணங்கள் ஒரு சமூகத்தின் ஒட்டு மொத்தமான நன்மைக்காக ஏற்பட்ட இறைத் திட்டமாகும். இதில் பிறப்பால், செய்தொழிலால் எந்தவித உயாவு தாழ்வும் கிடையாது. மனபரிபாகமே ஒருவனது வருணத்தை நிர்ணயிக்கிறது. இன்னொரு விதத்தில் பார்த்தால் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்னும் நான்கு வர்ணத்தாரை Intellectual class, warrier class, Trading class, Servant class (அறிவுத் துறையினர், ஆட்சித் துறையினர். வணிகத் துறையினர் மற்றும் ஊழியத் துறையினர்) என்ற நால் வகையினராகப் பிரிக்கலாம். அறிவுத் துறையில் ஞானிகள் மற்றும் இறை நாட்டமுள்ளோர் அனைவரும் அடங்குவர். பள்ளியில் கீழ்மேல் வகுப்புகள் உள்ளது போன்று சமுதாயத்திலும் இத்தகைய அமைப்பு தவிர்க்க முடியாதது ஆகிறது. 'எல்லா வேலையும் சமம்' என்ற மனப்பாங்கு இருக்குமேயானால் ஜாதியின் பெயரால் இன்று நாம் காணும் இத்தனை சீரழிவுகள் நேர்ந்திருக்காது. 'பிறப்பால், செய் தொழிலால் நான் உயர்ந்தவன், நீ தாழ்ந்தவன்' என்ற வேறுபாட்டுணர்வு என்று நம்மவர் மனத்தில் எழுந்ததோ, அன்றிலிருந்துதான் சமுதாய முன்னேற்றத்திற்கு உறுதுணையாயிருக்க வேண்டிய ஜாதி அமைப்பு, உட்பிரிவுகளும் உட்பூசல்களும் பெருகி ஹிந்து சமயத்திற்கே ஒரு களங்கமாக மாறிவிட்டது. இதை மாற்றுவது நமது கடமையாகும். ஜாதிகளை வைத்து தேர்தல்

---

பேராசிரியர் டி. கே. நாராயணன் MSc, M Phil.,
ஆசிரியர் 'சமயஜோதி' மதுரை.

---

கண்ணாமூச்சி விளையாடாமல், பொருளாதார அடிப்படையில் தகுதி மற்றும் திறமையின் அடிப்படையில் கல்வி மற்றும் வேலை வாய்ப்புக்களில் இடம் அளிக்கும் பொன்னாள் உதயமாவது ஆட்சியாளரது அந்தரங்க சுத்தம் மற்றும் பொது மக்களது ஆதரவையும் பொறுத்தே அமைகிறது.

**ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத:**
**ஸம்ஸித்திம் லபதே நர: |**
**ஸ்வகர்மநிரத: ஸித்திம்**
**யதா விந்ததி தச்ச்ருணு || (18-45)**

'அவனவனுக்குரிய கர்மத்தில் நிறைவுறும் மனிதன் இலட்சியத்தை

அடைகிறான். தன காமததில் கருதது வைப்பவன் நிறை நிலையை எப்படி அடைகிறான எனபதை நான் சொல லக் கேட்பாயாக.'

நாம் அனைவரும ஒரே தொழிலை அல்லது காமத்தைச செய்ய முடியாது. இயறகை வசத்தால், சந்தர்ப்பம் சூழ்நிலையால் நமக்கு எநதெந்தத் தொழில அலலது கர்மம அதாவது கடமை வநது வாயககிறதோ அதை முறையாக, முழுமனதுடன செய்வதால் நாம மனநிறைவு அடைய முயல வேணடும். வக்கீல நேர்மையான வககீல தொழிலிலும, விவசாயி நேர்மையான விவசாயத்திலும், பேராசிரியா அலலது ஆசிரியர் நேர்மையாக தமது ஆசிரியப் பணியைச் செயவதிலும், அதுபோல பலவேறு தொழிலகளில ஈடுபடுவோா தத்தம் பணிகளை நோமையாக ஆற்றுவதன் மூலம திருபதி அடைய முயல வேணடும வககீல டாகடரைப் பாாதது பொறாமைப்படுவதும் டாகடா வியாபாரியைப் பாாத்து ஏஙகுவதும, வியாபாரி லேவா தேவிக்காரனைப் பாாத்து பொறாமைப்படுவதும் தகாத செயலகளாம். செயயும தொழில நமககும பிறருககும் நற்பலனையும், மனத்திருப்தியையும, அமைதியையும், ஆனநதத்தையும் அளிப்பதாக இருத்தல வேணடும.

ஆழ்வார்கள, நாயன்மார்கள் மற்றும உலகின பல பாகங்களிலும அவ்வப்போது தோன்றியுள்ள மகா புருஷாகள் மற்றும் சானறோர்கள இநத உணமையைத்தான தஙகள் வாழ்வின் மூலம் நிரூபித்திருக்கின்றனா. குலமும் கோத்திரமும மனத தூய்மைக்கு முன், வெயில் முன் பனி போல இருநத இடம தெரியாது மறைநது போய்விடுகினறன. தன் கர்மததில் கருத்து வைப்பவன் எவவிதம் நிறைநிலையை எய்துகிறான எனபதைப் பகவான் அடுத்த சுலோகத்தில் விளககுகிறார்.

யத: ப்ரவிருததிா பூதானாம்
யேன ஸாவமிதம ததம |
ஸவகாமணா தமபயாசய
ஸித்திம விநததி மானவ. || (18-46)

'எவரிடததிருநது உயிாகள் உற பத்தியாயினவோ், எவரால் இவ்வைய கம யாவும வியாபிக்கப்பட்டுள்ளதோ அநதப் பரம்பொருளை மனிதன் தன் கடமையை ஒழுங்காக ஆற்றுவதால அடைகிறான்.'

நம்மால முடியாத ஒன்று படைககும காரியம் ஆகும. இப்பிரபஞ்சத்தில நாம பாாககும் யாவும் இறைவனால் படைக்கப்பட்டவை ஆகும். 'ஈசாவாஸ்ய மிதம் ஸாவம்' என்பது ஈசாவாஸ்ய உபநிடதத்தின முதல அடியாகும. 'பார்க்கின்ற யாவும இறைமயம்' என்பது இதன பொருள். 'ஆதி பகவன முதற்றே உலகு' என்று இதே கருததை திருவள்ளுவர் தம் முதல் குறள் மூலம் விளககுகிறார்.

(தொடரும்)

---

(20-ம பக்கத தொடாசசி)

இருப்பிடம திருககோவிலதான். அவா எணணம், சொல், செயல எலலாம் அணணாமலைதான. தொடககக் காலத்தில் நம்மகு அவா ஒரு சாதாரண பைத்தியமாகக் காணப்பட்டாா. ஆனால் அவரோ அணணாமலை மேல் அனபு மாறாத பிததர்.

ஸ்ரீ மகான சமாதியடைநது சுமாா ஐமபததாறு ஆணடுகளா ஆன பிறகும், இன்றும மககளுககு வேணடிய நனமைகளை வாரி வழஙக சூட்சம ரூபத்தில, இகபர சௌபாககயவதி, பிரும்மரிஷி, ஞானத்தாய் உமாதேவியாா மூலமாக நமமுடன் தொடாபு கொளகிறாா.

இவ்வமமையாா சிறுவயது முதலே தெய்வ பகதி மிககவர். பெரும செல்வக் குடுமபததில் பிறந்து வாழக கைபபட்ட இவா தன 25-ஆம வயதில் திருவணணாமலை மகான இசககி சுவாமிகள் மூலம உபதேசம பெறறாா். பின்னா தொடாநது 12 ஆண்டுகள் தன இல்லத்திலேயே கடுநதவம் இருந்தார். கடநத ஐந்தாணடுகளாக மகான் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள தன சூட்சம ரூபத் தொடாபாளராகத் தன் பக்தையான உமாதேவியாரையே தேர்நதெடுத்துள்ளார்.

பிருமமரிஷி உமாதேவியார் தறபோது சூட்சுமத்தில எங்கும் போய் வருகிறாா். பசி இல்லாத நிலையில், பழம், பால் மட்டுமே அருநதி உயிர் வாழக் கூடிய நிலை கடந்த சில ஆணடுகளாக இவருக்கு ஏறபட்டுள்ளது.

இவ்வம்மையார் திருவணணாமலையில 27, தெனமாததாதி தெருவில அரசு வழககுரைஞா திரு. ஆர். முததுக்குமார சுவாமி அவாகளின துணைவியாராகச சீரோடும சிறப்போடும் வாழ்ந்து வருகிறாா.

ஸ்ரீ மகான் தன்னை நாடி வருவோரை எல்லாம மலைவலம வரச் சொலகிறாா. மலைவலம் வருவதன மூலம பலருடைய நோய நொடிகள தீர்ந்திருககினறன. திருமணங்கள பல தடை நீங்கி நடநதிருக்கின்றன வேணடிய அனைததும நடநதேறி வருகினறன. பக்தாகள் வேண்டிய அனைத்தும நடக்கின்றன.

ஞாயிறன்று மலைவலம வருகிறவர்களுக்கு சிவலோகப் பதவி கிடைத்து உயர்நத நிலையை அடைகின்றனர்.

திஙகளன்று வலம் வருகிறவர்கள் பிறவிப் பெருங்கடலைச் கடக்கின்றனர். மரணபயம, மறுபிறவி நீங்குகிறது.

செவவாயன்று சென்றால் கடன் தொல்லைகளிலிருந்து விடுபடலாம். அதிகாரிகளின நிலை உயரும்.

அண்ணாமலையாரின அருளினால் புதனன்று வலம் வருகிறவர்களுக்குக் குருவினுடைய பதவி கிட்டுகிறது.

வியாழனனறு வலம் வரும் பகதாகளை எலலா தேவதைகளும் 'ஜகத் குரு' எனறு கருதி வணங்குகின்றனர்.

வெள்ளிக்கிழமையன்று வலம் வந்தால் அனைததுச செல்வங்களும் நம்மிடம் வநது சேரும. விஷ்ணு லோகம போயச சேரலாம

சனியனறு பிரதட்சிணம் செய்தால நவகோள்களின் கோளாறுகளிலிருந்து விடுபடலாம். எதிரிகள் அனைவரையும வெல்லலாம.

'வா' வென்று அழைக்கப்பட்டு திருவணணாமலைக்கு வந்தார் ஞானத்தபோதனர் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள். இனறு நம்மையும் 'வா'வென்று அழைத்து அருள் பொழியக் காத்திருக்கிறாா். ★

# மனக்கோயில்

உலகில் தோன்றிய மனித இனம் உய்யும் பொருட்டு பரம்பொருள் தன்னைப் பற்றிய நினைப்பை ஒவ்வொரு உள்ளத்திலும் பதிய வைத்து, இப்புவியில் வாழ்வாங்கு வாழ்ந்து இறுதியில் தன்னை வந்து அடைய வேண்டும் என்று தனு, கரண, புவன போகங்களைப் படைத்துக் காத்தருள் கின்றான். இக்கருத்தை நன்கு உணர்ந்த ஞானியர் ஞானத் தமிழ் புரிந்து தாம் பெற்ற இன்பத்தை இவ்வுலகும் பெற வழிகாட்டியருளினர். 'நாடி என் தன் உள்ளம் கொண்ட நாதன்' என்று திருமங்கையாழ்வார் பாடுவதிலிருந்து பரம்பொருளான இறைவன் அடியவர்கள் உள்ளத்தில் விருப்பமுடன் எழுந்தருளுவான் என்பது திண்ணமாகிறது. 'தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான்' என்பது மணி வாசகப்பெருமானின் மணிவாக்கு.

இறைவனை அடியவர்களே சென்று அடைய வேண்டும் என்பது ஒருவகை நெறி. இறைவனே அடியவர்களை நோக்கி வந்து அருள்பாலிப்பான் என்பது மற்றொரு நெறி. இவ்விரண்டு நெறிகளுக்குமே அடிப்படை அன்புதான். இவ்வன்பு மாறக் கூடியதன்று. என்றும் இறவா இன்ப அன்பு கொண்டொழுகினால்தான் ஆண்டவன் ஆன்மாவிடம் அருள் பாலித்து அழுக்கை நீக்கி ஆண்டருள் வான் என்பது அடியவர் கண்ட அனுபவ ரீதியான உண்மை.

அருள் பெறுவா ரடியார்தம்
அடியனேற்கு ஆழியான
அருள் தருவான் அமைகின்றான் அது
நமது விதிவகையே
இருள் தருமா ஞாலத்துள் இனிப்
பிறவி யான்வேண்டேன்
மருள் ஒழிநீ மடநெஞ்சே
வாட்டாற்றான் அடிவணங்கே.

திருக்கோவிலுள்ளிருக்கும் திருமேனியை வணங்கத் தம் நெஞ்சிற்கு அன்புக் கட்டளையிடுகின்றார் நம்மாழ்வார்.

இறைவன் மேல் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினாலே உலகியலின் தொடர்பு விட்டகன்று அன்பின் வடிவாய்த் திகழ்வர். அந்நிலை தோன்றும்போது அனைத்தும் தெய்வ வடிவாகவே தோன்றும். அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த வடிவாக விளங்கும் பரம்பொருள் அடியவரின் உள்ளத்திலும் சூழ்ந்து கலந்து துலங்கி நிற்கும். இந்நிலை தோன்றும்போது 'அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே' என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வாக்குப்படி மனம் மொழி மெய்களால் இறை நினைப்பைக் கொள்வதைத் தவிர வேறொன்றும் இருக்காது. திருமங்கையாழ்வாரும்,

அத்தா! அரியே' என்று உன்னை
அழைக்க
பித்தா வென்று பேசுகின்றார் பிறர்
என்னை
முத்தே' மணி மாணிக்கமே
முளைக்கின்ற
வித்தே' உன்னை எங்ஙனம் நான்
விடுகேனே!

என்று பாடுகின்றார். அதாவது இவ்வுடலும் உள்ளமும் இறைவன் தங்குவதற்காக மானிடர்க்கு அளிக்கப்பட்டவை. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று வாழ்நாளை வீழ்நாளாக்காமல் உள்ளத்தினுள்ளே உறுபொருளைக் கண்டு உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் என்றுகொண்டு அங்கு உறையும் எம்பெருமானை உணர்வுடனும் அன்புடனும் வணங்கி வழிபட வேண்டும் என்பதே அடியவர் நமக்குக் காட்டும் அன்பு வழி.

உடம்பு என்னும் வீட்டுக்குள்ளே மனமே அகலாகக் கொண்டு அறியாமை நீங்குதற்குக் காரணமான நல் உணர்வெனும் நெய்யை ஊற்றி, உயிர் எனப்படும் திரியைச் சேர்த்து விசாலமான ஞானமாகிய தீயால் (விளக்கினைப்) பற்றச் செய்து அத் தீப ஒளியில் இருந்து ஆழ்ந்து பார்த்தால் கடம்பமலர் மாலையை விரும்பும் முருகனுடைய தந்தையாரின் வீரக்கழல் அணிந்த திருவடிகளை அங்கே காணலாம்'' என்று அப்பர் பெருமான் அறிவுறுத்துகின்றார்.

முதல் மூன்று ஆழ்வார்களில் ஒருவர் 'வையம் தகளியா பாற்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக' வைத்துச் சொல்மாலை சூட்டுகின்றார். மற்றொருவர்

'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்பு (உ)ருகு சிந்தை, இடுதிரியா'(க)

வைத்து ஞானச்சுடர் விளக்கு ஏற்றுகின்றார் இன்னொருவர்

'திருக்கண்டேன் பொன்மேனி கண்
டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்'

என்று பகவானின் கோலத்தைத் தாம் கண்டபடி வர்ணிக்கின்றார். அதாவது உலகை முதன்மையாக வைத்து முதலில் வழிபட்டபின் உள்ளன்பை முதன்மையாக வைத்து வணங்கினால் எல்லாம் வல்ல கடவுளின் கருணை வடிவங்கள் அகக் கண்ணுக்குப் புலப்படும் என்று உணர்த்துகின்றனர்.

டாக்டர் ஆர். கோபாலகிருஷ்ணன்,
M.A., Phd.,
சென்னை-5.

அனறேநம கணகாணும ஆழியான
கார்உருவம
இனறேநலம காணு(து) இருபபதுவும-
எனறேனும
கடகணணுல காணுத அவவுருவை
நெஞசெனனும
உடகணணுல காணும உணாநது

எனறு பெரிய திருவநதாதியில நம மாழவாா பாடுவதிலிருநது புறக கணணுல காண இயலாத இறைவனது திருமேனியை அககககணணுல பாாதது மகிழககூடும எனபதாகும 'முகததில கணகொணடு காணகினற மூடாகாள! அகததில கணகொணடு காணபதே ஆனநதம' எனறு திருமூலரும வலியுறுததுகினறுா

ஒரு சைவ அடியவா (பூசலாா) மனததிலேயே கோயில கடடுகிறுா ஒரு அரசனும மிகப பெரிய கோயில ஒனறைக கடடுகிறுா இருவரும இறைவனைப பிரதிடடை செயய ஒரே நாள, ஒரே நேரததைக குறிககினறனா இறைவன அரசன கனவில சென்று தன அடியாா கடடியிருககும கோவிலுககு அனறு எழுநதருள இருபபதாயும, வேறொரு நாளில அரசன விழா நடததலாம எனறும வேணடுகோள விடுததாா அரசன நேரில சென்று பாாததபோது அடியவரைத தான கணடான, ஆலயததைக காண விலலை வினவியபோது, அடியவா தான மனககோவில கடடி வருவதைப பறறி எடுததுக கூறினுா ஆக, எம பெருமான விருமபிக குடி புகுவது தூயநல அடியாாகளின மனககோவிலதான எனபது தெளிவாகிறது

மனனுசீா மயிலைத் திருமாநகரில வாயிலாா நாயனுா எனபாா கூறுகிறுா

மறவாமை யானஅமைத்த மனக
கோயில உளளிருததி
உறவாதி தனையுணரும ஒளிவிளககுச
சுடரேறறி
இறவாத ஆனநதம எனுநதிருமஞ்
சனமகூடடி
அறவாணாக கனபெனனும அமுத
மைததாச சனைசெயவாா'

அதாவது எமபெருமானை மனமென ஆலயததுள ஆராத அனபினுல அருசசனை செயது அடியவாபால பேராத நெறிபெறறு விளஙகினுா எனபதாகும பெரியாழவாரும தமது திருமொழியிலஇதே கருததுப புலபபடப பாடுகினறுா

சோாவினற பொருள வைதத
துண்டாகில
சொலலு சொலலெனறு சுறறு
மிருநது
ஆாவின விழும வாய் திறவோதே
அநத காலமடைவதன முனனம
மாா்வ மெனபதோர் கோயில
அமைதது
மாதவனென னுந்தெயவததை
நாடடி
ஆாவ மெனபதோா் பூவிட வலலாாககு
அரவ தண்டததில உயயலுமாமே
★

---

ஓம ஸ்ரீமாத்ரே நம:



**ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்களால் ஸ்ரீமுகமும ஆசியும் அருளப பெற்று நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய யந்த்ரஙகள்.**

**(கீழ்வரும் சிறபபு வகையருக்களையும் நாங்கள் வழங்குகிறோம் பாதரஸ விநாயகர், லிங்கம், மணிகள் முதலியன).**

| | ரூ | | ரூ. |
|---|---|---|---|
| ஸ்ரீ மகாமேரு பஞ்சலோகம் 6×6 செ மீ (அளவு) | 500/- | பாதரஸ மணிகள் (அளவுகளுக்கேற்றவாறு விலை) (1,000), (750), (500), (250) ரூ | |
| ஸ்ரீ மகாமேரு பஞ்சலோகம் 4½×4½ செ மீ. ,, | 300/- | பாதரஸ மோதிரம | 150/- |
| ஸர்வஞான மனதான ஆகர்ஷண, மகாலக்ஷ்மி; மகா சுதர்ஸனம் 16×48 (செ மீ.) | 1500/- | ஸ்ரீ சந்தோஷி மாதா யந்த்ரம் | 125/- |
| ஸர்வ ஞான மனதான ஆகர்ஷணம, மகாலக்ஷ்மி சுதர்ஸனம யந்தரம் 8×24 செ மீ | 375/ | திதி நித்யக்கல் யந்தரம் 16 எண் கிடைக்கும் | — |
| 'பிரதிங்கரா், ஸரபேஸ்வரா், சூலினி யந்த்ரம 16×48 செ மீ (அளவு) | 1500/ | திருஷ்டி நிவர்த்தியுடன் சுதர்ஸன யந்தர பதக்கம | 60/- |
| பாதரஸ லிங்கம (அளவுகளுக்கேற்றவாறு விலை) (1,000), (750), (500), (250) ரூ | | காமாட்சியுடன தன ஆகர்ஷண பதக்கம | 60/- |
| பாதரஸ விநாயகா் (அளவுகளுக்கேறறவாறு விலை) (1,000), (750), (500), (200) ரூ | | காமாட்சியுடன மாங்கல்ய பாக்ய பதக்கம | 60/- |
| | | விநாயக பிரஜாபதி பதக்கம் | 60/- |
| | | ஸ்ரீ முருகன் ஆகர்ஷண பதக்கம | 45/- |
| | | திருஷ்டி நிவர்த்தி யந்த்ரம (சட்டத்துடன) | 55/- |
| | | 12 ராசிகளுக்கான (தனித்தனியாக) மின்னியக்க செப்புக் கைவளையம் | 20/- |

மேற்கூறிய பொருட்களைத் தவிர வேறுபல 108 யந்த்ரங்கள் எங்கள் நவசக்தி நிலையத்தில கிடைக்கும் கோயில்களுக்கு, வீடுகளில் உள்ள பூஜை அறைகளுக்கு, மற்றும் கிராம சமய வழிபாட்டுக்கூடங்களுக்கு வேண்டிய யந்த்ரங்களும் கிடைக்கும ஒவ்வொரு யந்த்ரத்தின விலை ரூ 101/- இலவச விலைப்பட்டியலுக்கு 50 பைசா தபால் தலையுடன் கீழக்கண்ட முகவரியுடன தொடர்பு கொள்ளுங்கள் வெளிநாட்டு சரக்காணைகள் 25% அதிக விலையுடன் ஏற்றுக்கொள்ளபபடும்

விஸ்வகர்மகுலய. ஸ்வாமிஜி ஸ்ரீ எஸ் டி. முருகபூஷணம்
ஸ்ரீவித்யா உபாசகர் & தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயிட்ஸ ரோடு, (ஸ்டேட பேங்க் எதிரில்) கோபாலபுரம்
சென்னை-600086. தொலைபேசி : 472013.

[ஆங்கிலம மற்றும தமிழில் மட்டுமே தொடர்பு கொள்ளுதல் வேண்டும்.]
வீடு தொலைபேசி எண் : 841254

"லோகாஸ் சமஸ்தாஸ சுகினோ பவந்து"

# பாவைப்பாடலின் இயல்பும் ஏற்றமும்

" உழவும தொழிலும இசைபாடும
உணமை சரிததிரம அசைபோடும
இழவில அழுதிடும் பெணகூட
இசையோடு அழுவது கணகூடு "

எனறு நாமககல் இராமலிஙகம்பிள்ளை தமிழும் இசையும், பெணமையும் இசையும் ஒன்றி விளங்குவதைப் பாராட்டிப் பாடுகிறார்.

இனபத்தையும் துனபத்தையும் இசையில வளாததும வடித்தும் வாழ்நத தமிழப் பெணகள் பகதிக் குரிய ஆடல் பாடலகளில் பாட்டும் பணணும் கூட்டி இசை பாடுவது இயல்பானதன்றோ!

கழங்கு அம்மானை, ஊசல், தெள் ளேணம்,தோணக்கம், தும்பி, சாழல், கும்மி, கோலாட்டம முதலிய பல நிகழ்ச்சிகளைப் பெணகள் இசையோடு இயற்றியதைத் தமிழ் இலக்கிய வரலாறு நமககு உணர்த்தும்.இத்தகைய நிகழ்ச்சிகளில ஒன்றே பாவைப்பாடலாக உருவாகியது. இது பணடைய நாளில் 'அம்பா ஆடல்' எனக்குறிக் கப்பட்டுள்ளது.இதற்கு உரிய யாப்பு 'இயல் தரவிணைக் கொச்சகக் கலிப் பா' என்பர். நானகடிக்கு மேற்பட்டு எட்டடியால் இயனற 'ஒரு போகு' அமைப்பு உடையது இது எனபர் பேராசிரியர்.

கன்னிப் பெண்கள் உலகம் வாழ, தமக்கு உரிய நல்ல தலைவன் கிட்ட இறைவியை வாழ்த்தும பொருட் டாகஇறைவனைபபோறறி எடுககின்ற இப்பாடல்பாவைப பாட்டாகும.

தமிழில தோன்றியுள்ள பாவை களுள் திருப்பாவையும் திருவெம்பாவையும் தலையாய பாவைகளாகும். இரு பாவைகளும் இந்து சமய இரு பெருங்கடவுளராகிய திருமாலையும் திருவண்ணாமலையானையும அடைதற்குரிய நெறியை உணர்த்துவனவாக அமைநது உளளன. பொதுவாக, பெணணொருத்தி வைகறை யாமததில் தனனோடு ஒத்தக் கனனிப் பெண்களை எழுப்பிச்சென்று பொய் கையில் நீராடும் நோன்பு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது இபபாவைப் பாட்டு. கனனியர்க்கு நலஞ்செய்யும இறைவியைப் பாவையாக வடித்து வணங்குதலினாலும் இநத நோனபு பாவையாக்கே உரியதானமையினாலும் இது பாவைப் பாட்டு என்று பெயா பெற்றது. 'நாமும் நம் பாவைக்கு' 'நாங்கள் நம் பாவைககு' 'பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்' என்ற தொடர்கள் இககருததுக்களை வலியுறுத்தக் காணலாம்.

எழுப்புகின்ற பெண்கள், உறங்கு கின்ற பெணகள் இருவரும் சேர்ந்து குளிாந்த நீரில் ஆடல் என்ற மூன்று அமைப்புகளில இப்பாவைப் பாடல்கள் அமைநது விளஙகக் காணலாம்.

எழுப்புவோா இறைவனுடைய திருவருட் சானறோர் ஆவா. எழுப்பப் பெறுவோர் ஆணவ மலமாகிய இருளிலிருநது விடுபடுதறகுரிய பக்குவ நிலையிலுள்ள உயிர்கள. குளிா நீா இறைவனது திருவடி நிழல் ஆகும. 'மூசுவணடறை பொய்கை' என்பர் இறைவன் அடியைத் திருநாவுக்கரசா. 'பொய்கை ஆடல' எனபது இறைவன் திருவடி இன்பததில திளைத்தலே ஆகும. 'மாாகழி நீராட' எனத் துவங்கி 'எறறைககும் ஏழேழ் பிறவிக்கும்' 'உனனோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம்ஆட்செய் வோம்' எனற தொடர்கள் இந்த உண்மையை உணர்ததும்.

இநநோன்பினால் உலகம் நலம் பெறும், உயிர்கள் உயர்வுறும்.

" வெம்பாதாக வியனில் வரப்பென .
அமபா ஆடல " —(பரிபாடல்)

" தீஙகினறி நாளெலலாம
திங்கள் மும்மாரி பெயது
ஓஙகு பெருஞ்செல்வம்
நீங்காத செல்வம் நிறைந்தேலோா
எமபாவாய் "

என்ற ஆணடாள் பாடல தொடர்கள், மற்றும

" முன்னி அவள் நமக்கு முனசுரக்கும
இன்னருளே
என்னப் பொழிவாய் மழையேலோ
ரெமபாவாய் "

எனற மணிவாசகர் பாடல் முதலிய வற்றாலும் இவ்வுணமை புலப்படும்.

டாகடா. பொன். சௌரிராசன்,
திருப்பதி.

பாவையுள் அமைந்துள்ள 1. மெய் யுணர்வு கைவரப் பெறறோர் செயல், 2. பககுவிகள், 3. திருவடி நீழல் எனனும மூவகை நோக்குகளில் திருப் பாவை, திருவெம்பாவை அமைந்து விளங்குதலைப் பின்வருமாறு காண லாம.

'நாராயணனே நமககே பறைதருவான்'
'உயயுமாறு எண்ணி உகந்தேலோா'
'ஓஙகி உலகளந்த உததமன்'
'தூயோமாய் வந்து நாம்'

எனற திருப்பாவைத் தொடாகள் ஞானம் கைவரப் பெறற ஆன்மாவின நிலையினை உணர்ததவல்லன.

இப்படியே,

'ஆதியும் அந்தமும இலலா அருட்
பெருஞ்சோதி'

'உன்னற்கு அறியான ஒருவன்'

'முன்னைப் பழமபொருட்கு முன்னைப்
பழம் பொருளாய்
பின்னைப் புதுமைககும் பெயர்த்தும
அப்பெற்றியனாை'

என வரும் தொடர்களும் ஞானம் பெற்றார்தம் தெளிவைச் சுட்டுவன.

இம்மெய்யுணர்வு கைவரப்பெற்ற உயிர்கள் அவ்வுணர்வுக்கு உரிய பககுவம் அடைநதுள்ள உயிர்களை நோககி உரைக்கின்ற கருத்துககளும் காணலாம.

"தூயோமாய வந்துநாம் தூமலர்
தூவிதொழுது
வாயினுற்பாடி மனத்தினுறசிநதிகக
போய பிழையும புகுதருவானின்
றனவும்
தீயினில தூசாகும செப்பேலோ
ரெம்பாவாய்"

மேலும், இத்தகு நிலைக்குத் தடையான மாயையில மயஙகாது விழித்திருத்தல் வேணடுமென்பதைப் பினவரும் தொடர்களால் ஆண்டாள அருளிச் செய்கினறுர்.

"கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப
கருணனும
தோறறு முனககே பெருந்துயிலதான்
தநதானே
ஆற்ற அனந்த லுடையாய்!
அருங்கலமே
தேறறமாய் வந்து திறவேலோ
ரெம்பாவாய"

இப்படியே, திருவெம்பாவையிலும் பக்குவ உயிர்களுக்கு அறிவுறுத்தும் பாங்கினைக் காணலாம்.

"கண்ணைத துயின்றவமே காலத்தைப்
போககாதே
விண்ணுக் கொருமருநதை வேத
விழுப பொருளைக
கண்ணுக கினியானைப பாடிக
கசிந்துள்ளோம்
உண்ணெககு நின்றுரு..."

இத்தகு தெளிந்த உயிரும் தெளிவு பெறற உயிரும் ஒனறு கூடித் தம பிறவியில் பெறுதற்கு உரிய பேறு இறைவனது திருவடி சோதலே எனறு உறுதிகொணடு திருவடி நீழலை அடைந்து அங்கு இன்புற்றிருத்தல் மூனறுவது நிலையாகும. இககருத்துக்கள பின்வரும் திருப்பாவைப் பாடல்களில இடம்பெறறு இலஙகக் காணலாம்.

"குறைவொன்று மில்லாத கோவிந்தா
உனறனனே
டுறவேல் நமக்கிங் கொழிகக
வொழியாது"

"இறறைப பறைகொளவா என்று
காண கோவிநதா
எற்றைக்கு மேழேழ பிறவிக்கும்;
உனறனனே
டுறருேமே யாவோ முனககேநா
மாட் செயவோம்
மற்றைநங் காமங்கள மாறறலோ
ரெமபாவாய்"
கூடி யிருந்து குளிர்ந்தேலோ
ரெம்பாவாய்

இவ்வாறே, இறைவன் திருவடிப் பேறே பேறு என்று வைராககிய சிதநராய அவன்பால் தஞ்சமடைந்து அவன் திருவடி நீழலில் உயிா தினைப் பதைத் திருவெமபாவையில் பின் வருமாறு குறிபபிடக் காணலாம்.

உஙகையிற் பிளளை உனககே அடைக்கலம்
என(று)
அஙகம் பழஞ்சொற புதுக்கும்எம
அசசத்தால்
எஙகள் பெருமான் உனக்கொன
றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னனபா
அலலர்தோள் சேரற்க
எஙகை உனககல்லா தெபபணியுஞ
செய்யறக
கங்குல பகல எஙகண் மறறொனறும்
காணறக
இங்கிப பரிசே எமககெங்கோன
நலகுதியேல்
எங்கெழிலென ஞாயிறெமக்கேலோ
ரெமபாவாய்"

"நஙகள பெருமானைப பாடிநலந்திகழப்
பஙகய பூம்புனலபாயந் தாடேலோ
ரெம்பாவாய்"

உபநிடதங்கள் தனி ஆன்மீகமெய் யுணாவைப் பற்றிப் பேசுவன. மெய் யுணர்வு பெறற ஆனமாககள் அவ் வுணர்வுக்குரிய உயிர்களை ஆணவ இருளிலிருநது விழிப்புறச் செய்யும் பணியில ஈடுபடுவதே பக்திப்பாடல் களின் இயலபாகும். இததகு பக்தி இயக்கப் பாடல்களில் 'தான் பெற்ற இனபம் பெறுக இவ்வையகம்' என் னும்போக்கில அமைநதுள்ள பாவைப் பாடல்கள் ஏறறமும பெருமையும் உடையனவாகும்.

★

# ஸ்ரீமத் விட்டலதாஸ ஸ்வாமிகள்

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி,
ஈரோடு.

நமது பாரத பூமி ஞானபூமி யாகும். ஒவ்வொரு காலத்திலும் ஞானோபதேசம் செய்யும் மஹான்கள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றார்கள். அந்த மஹான்களின் மறைவுக்குப்பின்தான் நாம் அவர்களின் பெருமையை உணர்ந்து போற்றுகிறோம். அத்தகைய பெருமைமிகு மஹான்கள் வரிசையில் வைத்து போற்றத் தக்கவர் ஸ்ரீமத் விட்டலதாஸ ஸ்வாமிகள் ஆவார்.

மஹாபக்த விஜயத்தில் பண்டரிபுரத் தெய்வம் பாண்டுரங்க விட்டலனும் தாஸர்களின் திருக்கூட்டமும் மிகவும் குறிப்பிடப்படுகின்றன. பாண்டுரங்க விட்டலனென கண்ணனின் அடியார்களான தாஸக் கூட்டத்தினரின் பெயர்களைப் படித்தோமானால் அவர்களில் ஒருவர் பெயர்கூட 'விட்டலதாஸர்' என அமையவில்லை. அந்தப் பெயர் இக்கட்டுரையின் நாயகன் ஸ்ரீமத் விட்டலதாஸ ஸ்வாமிகள் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. போற்றத்தக்க அந்த தாஸர்களின் வரிசையில் இவர் சேர்க்கப்படுவதற்காகவே இப்பெயர் இவருக்காக விடப்பட்டு விட்டது போலும்!

கிருஷ்ண ஸ்வாமி எனும் கீர்த்தி பாகவதருக்கும் ஸ்ரீமதி நாகசியார் எனும் நல்லம்மைக்கும் பிறந்த ஸத்புத்திரரான இவர் வேங்கடாச்சாரி எனும் இயற்பெயர் கொண்டிருந்தார். இவர் சிறந்த மாத்வ ஸம்பிரதாயி. துவாதஸ கோபி சந்தன திருநாமங்கள் அணிந்தவராக விளங்கினார். புரந்தர தாஸர், அன்னமய்யா முதலான மஹான்கள் போன்று தலைப்பாகை, துளசிமாலை, தம்பூரா, சிப்ளாக் கட்டை சகிதம் பகவந் நாமாவளிகளைப் பாடிக் கொண்டே இருந்தார். மீராபாய், சைதன்ய மஹாபிரபு முதலான கிருஷ்ண பக்தர்களைப் போன்று வீதிகளில் லஜ்ஜையின்றி பகவந்நாமாவளிகளைப்பாடிக்கொண்டே உஞ்சவிருத்தி செய்பவராக விளங்கினார். இவரது பாடல்கள் பகவானைப் புகழ்ந்து பாடும் பாமாலைகளாகவும் மக்களுக்கு ஆன்மீக அறிவை ஊட்டும் அறிவுரைகள் கொண்டதாகவும் விளங்குகின்றன.

ஸௌராஷ்ட்ர ஸாஹித்ய கர்த்தாக்களான ஸ்ரீமத் வேங்கடரமண பாகவதர், ஸ்ரீமந் நடன கோபால நாயகி ஸ்வாமிகள், ஸ்ரீமத் கவி வேங்கட ஸூரி ஸ்வாமிகள் முதலானோர் தங்களது தாய் மொழியான ஸௌராஷ்ட்ர மொழியில் கிருதிகள் இயற்றியிருப்பதோடு ஸமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் முதலிய மொழிகளிலும் ஸாஹித்யங்கள் இயற்றியிருப்பதைக் காணலாம். அந்த வகையில் விட்டலதாஸரும் ஸௌராஷ்ட்ரம், தமிழ் ஆகிய இருமொழிகளிலும் பாடல்களை இயற்றியுள்ளார். அன்னாரது ஸாஹித்யங்களில் சிலவற்றை இங்குக் காண்போம்.

ஸ்ரீ வேங்கடேஸனை விளித்து இவர் பாடியுள்ள 16 அடிப்பாடலின் முதல் நான்கு அடிகளைக் காண்போம்.

பகதி ஸதாபிதம் காரி பாமருன்
ஸெங்கேடி
பாலனெகார் வெங்கடேஸா தூ அத்
தெங்குடும்
ஸதது ஸங்கி தெக்காடி சார்வேது
அதிதமு
சுத்தஞான போதனுகு ஆவ்ஸெண
மாதுாவாகு

'வெங்கடேஷ்வரா! என் நெஞ்சில் உனது பக்தியை நிலை நிறுத்து. பாமரர்களின் தோழமையை நீக்கு; சதுர்வேத ஞான வடிவா! உண்மையை எனக்குத் தெளிவாக்குவாய். தூய ஞானத்தை போதித்து என்னை ஆதரிக்க விரைவில் வருவாய்' என்று பிரார்த்திக்கிறார்.

உபதேசப் பாடல்கள் சிலவற்றைப் படிப்போம்.

நிஜம் ஜலலேரே ஆத்மா நிஜம்
ஜலலேரே
நிலகுனு ஜேடை ஸரீர் நிஜம் ஜலலேரே

'பரமாத்மா பகவான். உடம்பு நிலைத்த தன்மையற்றது; நாளை இருக்காது. ஆத்மா என்றுமே இருப்பது. இவ்வுண்மை உணர்வீர்' என்கிறார்.

மாய் பாபு கேளுக்கேரு மத்தி
ஹொயகின ஜானுமுலலாம்
மர்மு ஹொஸெ திருமந்துரு மென்
னெரே பாஜுகு
மஹிமொ மிஞ்செ ஆதம ததவம
ஜனனேரே பா
மூலாதார பரததுவம் வாட ஜனஸ
தகவே —மெனிகு ஜெலமு
மீ மெனஸ்ஜெ மொட்டபபனுஸொண்
ணேரே பா—ஸொடிகின
மோகக்ஷிகேர் களிலி அமிர ணேரெபா.

"அன்னையும் தந்தையும் உண்டாக்கிய உடம்பு எனும் இவ்வீடு மண்ணாகிப் போகும் முன்பு திருமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' எனும் அஷ்டாக்ஷரத்தை உச்சரிப்பாயாக. மிக்க பெருமை பொருந்திய ஆத்ம தத்துவத்தை உணர்வாயாக. மூலாதார பரதத்துவத்தை அறிய எடுத்தது இம்மானுட ஜென்மம். நான் எனும் அகந்தையுணர்வை விட்டுவிடுவீர். மோட்சம் எனும் வீடு பேற்றை அடைதல் வேண்டும்" என்கிறார்.

தமிழ்ப் பாடல் சான்றுக்கு ஒன்று:

நித்தியானந்த சொரூப சத்து
சித்தானந்தம்
நீ தேடிக்கொள் ஜென்ம சாபல்யமே
முக்தி நெறி அறியா மூடர்க்கே லோக
மோக மதமான பேய மனமே.
'கண்டறியாமலே பண்டரி நாதனை
காலம் கழிப்பது வீண் ஜென்மமே
கண்ணாரக் கண்டதெல்லாமன கறபனை
காயத்தை நம்பாதே பேய்த்தனமே.

படிக்கப் படிக்க இனிக்கும் இவரது பாடல்கள் சுந்தர கீதங்களாகும். ஸௌராஷ்டர கவி ஸ்ரீ எஸ் எஸ். ராம் இவரது பாடல்களைக் குறிப்பிட்டு இயற்றியுள்ள சாற்றுக் கவி இவர்தம் பெருமையை உணர்த்துகிறது.

நாடிய செங்கருமபோ நவிலுந்தெள்ள
முதமேயோ
தேடிய ஞானப்பாலோ தீஞ்சுவை
மதுரத்தேனோ
சூடிய துழாய் முடியோன துணைப
பதம பரவி நோற்று
பாடிய விடலபெம்மான் பாடலென்
சொல்வதம்மா.

# மதிப்புரை ....

'ஸ்ரீமத் பாகவதஸாரம்' தமிழ் உரையுடன் கூடியது. கிடைக்குமிடம்: ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை-4.

மானவர்களுடைய நன்மையை அடையும் நெறிகளை உபதேசிப்பதற்காகத் தோன்றியவை வேதங்கள். அவ்வேதங்களின் உட்கருத்தினை எளிதில் அறிவது எல்லோராலும் இயலாது. ஆகவே வேதங்களில மறைந்து கிடககும உணமைகளை விளக்க வந்தவை இதிஹாஸங்களும் புராணங்களும். இராமாயணமும மஹா பாரதமும இதிஹாஸஙகள் எனப் படுவன. இராமாயணத்தை இயறறியவர் வால்மீகி முனிவா. மஹா பாரதத்தை இயற்றியவர் வேதங்களைப் பாகுபாடு செயதவேதவியாசர்: இராமாயணம் 24 ஆயிரம் சுலோகம் கொணடது. பாரதம் ஒரு லக்ஷம் சுலோகங்களைக் கொணடது

வியாஸர் மஹா பாரத்தைத் தொகுத்தபின் மனதில் நிறைவிலலாமல் எக்காரணத்தாலோ ஆசை நிறைவேறுதவர் போல் காணப்பட்டார். அச்சமயம அவருடைய ஆச்ரமத்திற்கு நாரதா எழுநதருளி 'எல்லாப் பொருட்களும் பரிபூர்ணமாய் நிறைந்த மிக அறபுதமான பாரதத்தை இயற்றியவர் நீர். எனரு லும் பயனற்றவரைப் போல் உம்மைக குறித்தே ஏன் வருநதுகிறீர்' எனறு வினவினா. அதறகு வியாசர் 'உம்மால் கூறப்பட்டது உணமையே. ஆயினும எனது ஆத்மா சநதோஷமடையவில்லை. அதன காரணத்தைத தெளிவுறக் காட்டியருள வேண்டும்' என்று கூறினர். 'பல விஷயஙகளை இடையிடையே கூறிய நீர் பகவானுடைய மகிமையைத் தொடர்ந்து வருணிக்கவில்லை. எல்லோருடைய பந்தங்களும் நீங்கும் பொருட்டுப் பகவானுடைய லீலைகளைப் பிரகாசப் படுத்துங்கள்' எனறு கூறினர் நாரதர். இநத உபதேசத்தைப் பின்பற்றி ஸ்ரீமத் பாகவதத்தை எழுதி, வியாசர் தன புத்திரராகிய சுகருக்கு அத்தியயனம செயவித்தார் பகவானுடைய மகிமையையே வருணிக்கும இந்த பாகவதம் ஒப்பற்றது பகவானிடத்தில் பக்தியைப் பெருக்க வல்லது. எலலோருடைய மனதையும் உருக்க வைககும பாஙகுடையது; பாபங்களைப் போக்கவல்லது.

'வித்யாவதாம பாகவதே பரீக்ஷா' என்பது ஒரு பழமொழி. ஒருவன் ஸம்ஸ்கிருததததில் பணடிதன எனறு பெயர் பெற வேணடுமானல அவனை பாகவதத்தில பரீக்ஷிக்க வேணடும் என்பது அதன் பொருள். இதிலிருந்து பாகவதத்திற்குப் பொருள கூறுவது மிகக் கடினம என்பது பெறப்படுகிறது. இந்த பாகவதத்திற்கு சென்னை மயிலாப்பூரிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்து அதிகாரிகள் 'பிரமம ஸமஸ பர்சம்' என்றும் ஒப்பறற தமிழ் உரையுடன இரணடு பாகஙகளாக வெளியிட்டுள்ளனர். இதனை உற்று நோக்கி அநேக இடங்களில் படித்தேன. மூலத்திற்குத தக்கவாறு சொற்களைத் தேர்ந்தெடுத்து எளிய நடையில் மொழி பெயர்த்துள்ளனா. எல்லோரும் பயனடையும் வகையில் உரை அமைந்துள்ளது.

சுகர் பர்கவதத்தை ஏழு நாட்களில் பரீக்ஷித்துக்கு உபதேசித்தார். முதல் நாள் வராஹாவதாரம வரை. இரண்டாவது ஜடபரதோபாக்யானம் வரை. மூன்ருவது நாள அம்ருதமதனம் வரை. நாலாவது நாள் கிருஷ்ணுவதாரம் வரை. ஐநதாவது நாள் ருக்மிணீ கல்யாணம வரை. ஆருவது நாள் உததவ ஸமவாதம் வரை. ஏழாவது நாள பூர்த்தி. இதே முறையில் பாகவதத்தைப் பாராயணம் செய்வது 'ஸபதாஹக்கிரமம்' எனப்படும்.

இந்தப் பதிப்பில் அப்படிப் பிரித்து ஏழு நாளில் படிக்க அனுகூலமாயிருக்கும் வகையில், தொடர்பு கெடாமல், முக்கியமான விஷயங்கள் விடுபடாமல் பாகவதததின் மூலம ஏறக குறைய ஆருயிரம் சுலோகங்களில் சுருக்கித் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு சுலோகத்திற்கும் தனித்தனியாகப் பொழிப்புரையும ஸ்ரீதர ஸ்வாமியினுடைய 'பாவார்த்த தீபிகை' எனனும் வியாகயானத்திலிருந்து விளககக் குறிப்புக்களும், பகவத்கீதை, உபநிஷதங்கள், ஸ்ரீராம கிருஷ்ணர் உபதேச மொழிகள், திவ்ய பரபந்தம ஆகியவறறிலிருந்து ஒப்பிட்டுப பார்க்க உதவும் மேறகோள்களும் கொடுக்கப்பட்டிருக்கினறன. இந்தச் சிறநத உரையுடன கூடிய பாகவதத்தைப படித்து எலலோரும் பகவானுடைய அருளுக்கு இலக்காகி இன்புறுவர்.

'திருவேஙகடமுடையான விஷயம்' ஆக்கியோன். வே. சு. அருணன். கிடைக்குமிடம: பீதாம்பர பணணை, 121, (திருமலை) 80வது தெருவு, அசோக் நகா, சென்னை-83.

குலசேகராழ்வார் அருளிச் செயத நூற்றைநது பாசுரங்கள் கொணட பெருமாள திருமொழி எனனும பிரபந்தத்தில் நானகாவது பதிகம திருவேங்கடமுடையான் விஷயமாக அருளிச் செய்யப்பட்டது. குலசேகராழ்வார் பதினெரு பாசுரஙகளிலே திருவேங்கடமுடையான் விஷயத்தை அருளிச் செய்தார். முதல் பத்துப் பாசுரஙகளிலே பாங்குடனும் பரவசத்துடனும் விஷயங்களை விளக்கினர். இவற்றைப் புகலவதால் ஏற்படும் பலாபலனகளைப பதினேராம் பாசுரததிலே கூறினர்

திருமலையின் திவ்யஙகள், திருவேங்கடமுடையானின் திவவியங்கள், வேணடாத விஷயங்கள, ஆழவாரின ஆசைப் பெருக்குகள் என நான்கு விஷயஙகளாகப பிரிததுக் கொண்டும் ஒவ்வொரு விஷயமும் ஒவ்வொரு பாசுரததிலும கூறப்பட்டுளளபடியை இநநூலை இயற்றிய வே. சு. அருணன் எனபவர் விளககிப் பேசியுள்ளார். ஆழ்ந்த அனுபவத்தையும் இன்பத்தையும் உண்டு பண்ணக் கூடிய நூல் இது. எல்லோரும் படிக்க வேண்டிய நூலுமாகும்.

என். எஸ். ராமானுஜதாதாசாரியர்
திருப்பதி.

# திருமண்ணும் திருநீறும்

திரு. வேகேசன வெங்கட்டரமணன,
இராஜபாளையம்.

போலித்தனங்களும், வறட்டு எணணஙகளும் சேர்ந்து வளர்நது வரும் இனறைய நாகரீகச் சூழலில், திருமண அணிவதுமட, திருநீறு பூசுவதும் நாகரீகமற்றச் செயலெனக் கருதுவதும் ஒரு தவறுன எணணமாகும். நீறு அணிபவர்கள பொறுமைசாலிகளாகவும், நல்ல ஆரோக்கியமுடையவர்களாகவும் இருக்கிறுர்கள.

சமயச் சின்னத்தை நாம ஏன் அணிய வேணடும? மனிதாகளாகிய நாம், நமது உடம்பினை நலமுடன் வைத்திருக்க விரதம (உணணு நோன்பு, பேசா விரதம்) முககியமானது. இந்த விரதங்களை உடல் நலனுக்காக என்பதைவிட, 'இறைவனின் திருநாமத்தைச் சொல்லி, இந்த நாட்களில் இந்த விரதம் மேற்கொள்வோம்' என்று விரதமிருப்பது நடைமுறையாகி உள்ளது. இநத நடைமுறையைப்போல், நாம் நெற்றியிலே மதச் சின்னமாக அணிகின்ற செயலின் நடைமுறையிலும் அறிவியலின் அடிப்படைத் தத்துவம் அடங்கியுள்ளது.

உலோகப் பொருட்களுக்கு மின் காந்த அலைகளைத் தடுத்து வெளிப்புறமாகச் சிதறச செய்யும் தன்மையுணடு. பாடிக் கொணடிருககும் டிரான்சிஸ்டரை ஒரு உலோகப் பாத்திரத்தால் மூடினுலும், இரயில் வணடியில் வைத்துப்பாட வைக்க முயன்றுலுமப பாடுவதிலலை. ஏன? வானெலி நிலையங்களிலிருந்து வருமமினகாநத அலைகளை உலோகப் பொருட்கள் (அதன் அடர்த்தி எணணைப் பொறுத்து) உட்செல்லாமல்தடுத்துப் பிரதிபலிப்பு போல, வெளிப்புறமாகச் சிதறச் செய்கின்றன.

இதைப் போலவே ஒரு மனிதனின் மூளையிலிருந்து வெளியாகின்ற காந்தக் கதிர்கள், நெற்றியில் நீறு அணிநதவரின மூளைக்குச செல்லாமல் தடுக்கபபடுகின்றன. உஙகளை ஒருவர் சபிககுமபோது அவருடைய கோபம், கனல் பறககும கண் பார்வை இவறறிற்கேறப அவருடைய மூளையிலிருநது காந்தக் கதிர்கள் வெளியேறும். அவ்வாறு வருகினற காநதக் கதிாகளுக்கு நேர் கோட்டில், ஒரு குறிடபிட்ட தூரத்தில நீஙகள் இருக்கும்போது, அககதிாகள் உங்கள் மூளையைத் தாக்கும். காந்தக் கதிர்களால் தாககப்பட்ட மூளை உங்கள் உடல் நலனில் மாறுதலையும், பாதிப்பையும் ஏற்படுத்தும. இது உங்கள் உடலிலுள்ள எதிர்ப்பு சக்தி, மூளையின் வலிமை ஆகியவற்றைப் பொறுத்தது.

ஓர் உலோகப் பொருள் எவ்வாறு வானெலி நிலையத்திலிருந்து வருகின்ற மின்காந்த அலைகளைத் தடுத்து, சிதறச் செய்கிறதோ, அதைப் போலவே நாம் நெறறியில் திருநீறு அணிநதிருநதால் பிறருடைய மூளையிலிருநது வரும் காந்தக் கதிர்கள் தடுககப்பட்டு வெளிச் சிதறும. நெறறியிலே அணியும திருநீறு ஒரு எடையில்லாத கவசமாக நம்மைக் காததுநிறகிறது.

திருநீரை நீரில் குழைத்து, நடு நெற்றியில மூன்று விரல்களையும் அழுத்திய தன்மையில் மூனறு புளளிகள் வைப்பது போல் அணிவதால் வெளியில் இருந்துவரும காநதக கதிர்களில் இருந்து நம் மூளையைப் பாதுகாக்கலாம்.

ஒருவர் கோபமாக நம்மை நோக்கி வருமபோது, நாம் நெற்றியில் அணிந்துள்ள திருநீறு அவரது உள்ளத்தைச் சிறிது மாற்றிவிடும. அவரது கோபத்தில தணிவு இருக்கும். அனுபவப்பட்டவாகளுக்கு இது தெரிந்த செயதி.

## மனிதனுக்கு எத்தனை கண்கள்?

மனிதனின் மூளைப் பகுதியில் மூன்றுவது குறிககுப் பினனுல் ஓர் உளுந்து அளவில வெண்மையும், சாமபலும் கலநத வெளிர் நிறத்தில் உள்ள திசுககட்டிக்குப் பீனியல் சுரப்பி எனப் பெயர். இதைத்தான் கீழை நாட்டவர் நம்புகின்ற மூனறுவது கண் என அறிவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். இநதப் பீனியல் சுரப்பி பரிணும வளர்ச்சியின காரணமாக உபயோகமில்லாமல் போய்விட்ட ஒன்று அல்லது ஹர்மோன்களை உற்பத்தி செய்யும் சுரப்பியா? என முடிவாகத் தெரியாத புதிராகவே கருதப்பட்டது.

1958-ஆம் ஆண்டு லெர்னெர் என்ற அறிவியல் அறிஞர் பீனியல் சுரப்பியிலிருந்து மெலாடானின் என்னும் ஹார்மோன் உற்பத்தியாகிறது என்று கண்டுபிடித்தார். கீரா பெல்ஸ் எனற கிரேக்க நாட்டு அறிவியலறிஞர் இதனை, 'சிந்தனை ஓட்டத்தை ஒழுங்குபடுத்து வால்வு' என்று அறிவித்தார்.

சுரப்பியில் உள்ள சிரடோனின் என்னும் இரசாயனப்பொருளிலிருந்து மெலடோனின் உருவாகிறது. சிரடோனின் போதி மரத்திலும் காணப்படுகிறது. (போதி மரம் அரசமரம் வகையைச் சார்ந்தது). இது தெளிவான சிநதனையை ஏற்படுததுகிறது. இநதப் புதிா விடுவிககப்பட்டபோது நமக்கு ஒரு ஆசசரியம் ஏறபடுகிறது. வரலாற்றில் மகான புத்தர் போதி மரத்தடியில் ஞானம் பெற்றதாகக் காட்டப்படுவதும், அவரைப் போதி சததுவர் எனக் குறிபபிடுவதும அறிவியல தத்துவத்தின் பொருளனறே.

சிரடோனின் சரியான அளவில் இருக்கும் போது மனிதனின் சிந்தனை

## தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

### தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாகடர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறுன —நஜன் | 0—50 |
| 10 | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

### சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10 | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

ஒரே சீராக இருககும். அது குறை யும்போது பிரமைகளும், மனக் கோளாறுகளும் ஏற்படுவதாக மருத் துவ அறிவியல கூறுகிறது. மூளையின் அடியில் புதைநது கிடந்தாலும், பீனி யல் சுரப்பி ஒளிச் செறிவில் ஏற்படும் (ஒளிசசிதர்) மாற்றங்களின் காரண மாக சிறிதேனும் பாதிக்கப்படலாம். பீனியல் சுரப்பியை இது போன்ற ஒளித் தாக்குதல்களினின்று பாது காப்பதற்குத்தான் நெற்றியில் நீரு அணியும் பழக்கம் ஆதிகாலத்திலேயே ஏற்பட்டதாகவும் கருதப்படுகிறது.

ஸ்ரீராமானுஜர் மைசூரில் உள்ள திருநாராயணபுரத்தில் தன் சீடர் களுடன் ஸ்ரீநரசிம்மனை வழிபட்டு வரும் நாளில், தங்கள் நெற்றியில் அணியும் திருமண் குறைந்து கொண்டே வந்ததாகவும், ஸ்ரீராமா னுஜர் பகவான் ஸ்ரீமந் நாராயணனைத திருமண் கிடைக்கச் செய்யும்படி அருள வேண்டி பிரார்த்தனை செய்த தாகவும், பகவானும் அவர் கனவில் தோன்றி ஒரு குறிப்பிட்ட மேட்டுப் பகுதியைக் குறிப்பிட்டு அங்கு தேவை யான மட்டும் திருமண் கிடைக்கும் என அருள்பாலித்ததாகவும், ஸ்ரீராமா னுஜரும அஙகுச் சென்று, அவ்விடத் தில் திருமண் ஏராளமாக இருந்த தைக்கண்டு மகிழ்ந்ததோடு, அங்கே கண்ட ஸ்ரீமந் நாராயணனின் விக்ர கத்தை அங்கே பிரதிஷ்டை செய்து பூஜை செய்ததாகவும் வைணவம் செப்புகின்றது.

கம்பராமாயணத்தில் இராமன் தனது மண விழாவின்போது மங்கள ஸ்நானம் முடித்ததும் திருமண் அணி வதைக் கம்பர் காட்டுகிருர்.

தினமும அதிகாலையில் துயி லெழுந்து, நீராடி முடித்து, நெற்றி யில் திருமண் அணிந்தால் நெற்றியில் உள்ள நாடிகளில இருந்து கெட்டநீர் வற்றி உடல் ஆரோக்கியம் தொடரும் எனபது மருத்துவ தத்துவம்.

நெற்றியில் மதச் சின்னங்களாக அணிகின்ற திருமண், திருநீறு குறித்து அறிவியலும், ஆன்மீகமும் ஒரே கருத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது மாற்ற முடி யாத, மறுக்க முடியாத உண்மை என் பதை இக்கட்டுரை நமக்கு விளக்கி யது.



# குசேலோபாக்கியானம்

ஸ்ரீவேத வியாசர் அருளிச் செய்த ஸ்ரீ மஹா பாகவதந்தன்னிலுள்ள சிரேஸ்ரடமான பகுதி, குசேலர் பற்றியது ஆகும். இந்த பக்தி சிரோன்மணியான குசேலரின் கதையை, பக்திரஸம் நனி சொட்டச் சொட்ட, 'குசேலோ பாக்யானம்' என்ற பெயரில் இனியதோர் காவியமாக அருளிச் செய்திருக்கிறார், ஸ்ரீனிவாசன் என்கிற புலவர். இவருடைய தந்தையாரின் நாமம் நாராயணன். மீனாட்சி சுந்தரதேசிகர் இவரின் குரு; இவரை ஆதரித்த வள்ளலின் பெயர் தொண்டை நாட்டு வல்லூர் தேவராசன் என்பவர். 150 ஆண்டுகளுக்கு முன் பாடப்பட்ட 'குசேலோபாக்யானம்' என்னும் காவியமானது பக்தி ரஸம் பொதிந்து, காவியநயம் மிகுந்து, கற்பனை வளம் செறிந்து, பலவகை அணிகள் மிளிர்ந்து காணப் படுகிறது.

குசேலரின் இயற்பெயர் சுதாமன். குசேலன் என்றால் சிதைந்த ஆடையை யுடையவன் எனபது அர்த்தம். பரம ஏழை; குசேலர் தம்பதியருக்கு இருபத்தேழு குழந்தைகள்.

"கொழுந்து விட்டெரியும் பசித்தழல
வித்துக் கோதில் வைராக்கியமிக்குற்
றழுந்துபடடிடாத சாந்திராயணமுளைப்
பருஞ்செயற்கருவிர
மெழுந்து விட்டொளிரப் பறபகலாற்றி
யென் பொடுநரம்புகடோன்றிச
செழந்தவை வற்றியிளைதத யாக்கை
யனுத் திகழ்ந்தனன சிர்த்தியந்
தணனே"

"கொடியது வறுமை" என்பாள் அவ்வைப் பிராட்டி; குசேலர் தம் பதிகள் வைக்ராக்யத்துடன் விரதம் காத்து வாழ்க்கை நடத்தி வந்தனர், பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாய் வாய்த்தவள் குசேலரின் மனைவி.

"சொன்ன காரியமனைத்துக்கு சொன்ன
படியியற்றுவளே
யென்ன மிடிவரினும் வெளியெடுத்
தியம் பாவியலினளே
தனனமு நாயகன் பழிதூற்று தமை
யத்தக்கவளே
பன்னருமாமறை யுணாந்த பளகனு
நற்குணக்குன்றே"

ஒரு நாள் கணவன் முகத்தைப் பார்தது 'ஸ்ரீ கண்ணபிரானை தேவரீர் ஒருக்கால் எழுந்தருளிச் சேவித்தால் சகல புருஷார்த்தங்களும் பெறலாமென்று தோன்றுகிறது. அப்பால் தமக்கிசைந்தபடி நடத்தலா'மென, குசேலர், 'இவன் சொன்னபடி செய்தால் ஜகதீஸ்வரனுன வாசுதேவனுடைய சேவை நமக்குக் கிடைக்கும்; அதைக காட்டிலும், நமக்கென்ன புருஷார்த்தம் வேண்டும்' என்று நினைத்தார். மன்னர், தெய்வம், குழந்தைஇவர்களைக்காணச் செல்லும் போது வெறுங்கையோடு செல்லக் கூடாதெனபது சம்பிரதாயம்.

"முழுமுதடற்கு மேதாவது கையுறை
கொண்டு முனனுறதல் வேண்டும்"

என்று தன் இல்லாளிடம் சொன்னார். அவளோ, அவலை இடித்து, அவலமான கந்ததல துணியில் சுற்றி அன பர்தம கரத்தில் ஈந்தாள்.

"கறையிடடு நனி காண வுலக்கைகொடு
மிக்கிடித்துக்கரிசு போக்கி
நிறையிடடவ வலாக்கி குசேலமுனி
கந்தையினிடைடியோர்பான்,
மறையிட்ட வொழுங்குடையான்
முடிந்து கொடுத்தினிது போய்வருக
வென்றாள்
சிறையிட்ட பவ நீங்கும் வழிகண்டோன்
வழிதேடிச் செல்லலுற்றான்"

பசி வாட்டி வதைத்திட, களைப்பு அலைக் கழித்திட, கால்கள் நோவ, வெகு தூரம் நடந்து, துவாரகை வந்தடைந்தார் குசேலர், அரண்மனை வாயிலிருந்த துவாரபாலர்களிடம் ஸ்ரீ கண்ணனைக் காண வேண்டுமென்ற விருப்பதை வெளியிட்டார். உடனே கிருஷ்ணபகவான் குசேலரைக் காண எழுந்திருந்து அதிவேகமாக ஓடிவந்து அவரைக்கண்டு ஆலிங்கனம் செய்து, தமக்குத் தோழராய்ப் பிராமண சிரோஷ்டராயிருக்கின்ற அந்த குசேலருடைய சரீர சம்பந்தத்தினால் ஆனந்த பாஷ்பங்களை உதிர்ந்து தேகம் புளகிக்க அவர் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு உள்ள சென்றார்.

"எண்ணனைக் கிலங்கு மார்பமீத்தருளி
பிரானை நில
வண்ணனைத் திகிரி சங்கம வலமிட
முறக் கொண்டானை
மண்ணனைத்தும் புரக்கும் வாசு
தேவனை மணக்கும்
கணணனைத் துளவத் தாமக் கண்ண
னைக் கண்ணிற்கண்டான்"

குசேலரை நீராடச் செய்து, பட்டாடைப் போர்த்தி, அறுசுவை உணவு உண்பித்துப் பஞ்சணையில் சயனித்திருக்கச் செய்தார். கண்ணபிரான் குசேலருடைய திருவடிகளைத் தமது மடியினில் வைத்துக் கொண்டு வந்த களைப்புத் தீரும்படியாக

திரு. எம். மாரிமுத்து.
ஈரோடு.

வருடினார். அந்த சமயத்தில் ஸ்ரீ ருக்மணிதேவி கண்ணன் செய்த உபசாரங்களுக்குத்தானும உடந்தையாக வெகு வினயத்துடன் சைத்யோபசாரமாகத் திருவால வட்டம் சேவித்து சாமரம் வீசினாள். பிறகு, குசேலரின் குடும்ப சேமங்களை விசாரித்தார் கண்ணன். தாங்களிருவரும் ஒரே குருவினிடத்தில் கற்றுணர்ந்த கல்வி மறவாமல் நினைத்துக்கொண்டிருக்கிறீரா வென்று விசாரித்தார்.

பல வருடங்களுக்குப் பிறகு தன்னைப் பார்க்க வந்த நண்பனைப்

பார்த்துக் கணணன் எனக்காக என்ன கொண்டுவந்தாய் என்று கேட்க சுற்றியிருந்த கநதல் துணியினை அவிழ்தது அவலே கணணனிடம் சமாப்பித்தார் குசேலர். ஒரு பிடி அவலே பெரும் மகிழ்ச்சியோடு வாயிற் போட்டுக் கொணடான் ஸ்ரீ கணணன.

"மற்ருேர் பிடியெடுத்து வாயிடப் போகுஙகாலே
முற்றிழைத் திருவுருக்குமணி யெனு முத்தமுரற்
பொற்றெுடிப பூஙகொமபன்னுள பொருக்கெனவோடி வநது
கற்றவர் புகழ்தன கேள்வன் கரத தினைப் பிடித்துக் கொணடாள்"

இரண்டாவது பிடி எடுக்கிறபோது ஸ்ரீருக்மணி தேவி வநது தடுத்து, அதைத் தான் பெற்றுக் கொணடாள். ஒரு பிடி அவலுக்கே இகத்திலும் பரத்திலுமுண்டான சகல சமபத்துகளும், குசேலேருக்கு சுவாதீனமாகப் போயிற்று. இந்த இரணடாவது பிடி அவலுக்கு பரமனல்லவோ வசியமாக வேண்டுமென்கிற கருத்து கொண்டவராய், புசிக்க வேணடாமென்று ஸ்ரீருக்மணி தடுத்ததை சுவாமி அறிநதார்.

சின்ஞள் தங்கிய பிறகு, ஸ்ரீ கண்ணனிடம் விடைபெற்றுக் கொணடு ஊர் திரும்பினுன் குசேலர். பாலய நண்பராயும், நட்பிறகு இலக்கணமாகத் திகழும் சகல வல்லமை படைந்தவனுமான ஸ்ரீகணண பகவானிடம் நாமாக இருந்திருந்தால் வேண்டாதெல்லாம் வேணடியிரந்திருப்போம். இறைவன திருமுன் முறையிடுகையில, குறை தீர்க்க கோருகிருேமே, குற்றத்தை மறைக்க அவன் திருவடி நிழலில பதுஙகுகிருேமே.

குசேலரோ, ஸ்ரீகண்ணனிடம எதையுமே வேணடிக் கொளளாதவஞக தன் ஊருக்குப் புறப்பட்டார்.

"கதிரு திக்குங்காலேயெழீ இக்கடன் பலவுழறறியடா
முதிர்புலன் செற்றஞான முயனறடைந் தோஞலினுன
மதிகுலந்து மனனவன்பால திறந தொனறுங் கேளா
விதியமிகப் பெற்றவனுய் நினைத் தூாககு வழிகொண்டான்"

தன்னூர் திரும்பியவர், தன் குடிசை அரண்மனையாக மாறிவிட்டதையும், சகல சம்பத்தும நிறைந் திருப்பதையும் கண்டு அதிசயித்து நிற்க, எலும்பும், தோலுமாயிருந்த அவன மனையாட்டி, இனமுகத்தோடு அவனை வரவேற்ருேள். சில காலம தாம்பத்ய வாழ்வை சுகித்திருந்த பின்னர் ஸ்ரீகணணன் திருவடி நிழலடைநதார் குசேலர்

"வண்டாடு பூந்துளப மாலேயனை வானேர்கள்
கொண்டாடுஞ்சோத்தியனைக கோவலா பாடித்தயிாநெ
யுண்டாடு சிதரனை யொபபிலா வற்புதனைக்
கண்டாடு மன்பருளங் காதலிககும புண்ணியனைத்
தொண்டாடுவன்றி யெனச சொலலித் துதிமுழககி
யொண்டாடுனேக் கொண்டுயர் வீருலகிரே"

திருமலே திருப்பதி தேவஸ்தானம் கீழ்வரும் இருதிட்டங்களைப் புகுத்தியுளளது. இதனுல்,நன்கொடை மற்றும் மலிவு விற்பனை முறையில் இநதுக்கோயில்களில் நிறுவுவதற்கான கடவுளர்களின் கற்சிலேகள் வடித்தனுப்பப்படும்.

நன்கொடை திட்டத்தின் கீழ் ஸ்ரீவேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ பத்மாவதித்தாயார் திருவுருவக் கற்சிலேகள் இந்துக்கோயில் நிருவாகிகளுக்கு வழங்கப்படும்.

மற்றெரு திட்டத்தின் கீழ் 50 சதவிகிதம குறைந்த விலேயில் எல்லா இந்துக்கடவுளர்களின் திருவுருவக்கற்சிலேகள வழங்கப்படும்.

இவ்விரு திட்டஙகளின் கீழ் பயன் பெற விரும்புவோர்,அதற்கான மனுவுடனும், செயலாட்சிததலேவா, தி.தி. தேவஸ்தானம(அஞசல் குறியீட்டு எண். 517501) என்ற முகவரியுடன் தங்களுடைய கோயில்களின விரிவான உருவரைபபடம், மற்றும அவவட்டார உதவி ஆணையர் பதவிககுக்குறையாத அறநிலேயததுறை அலுவலா அல்லது மண்டல அலுவலர்களிடமிருந்து பெறப்பட்டசான்றிதழுடனும தொடர்பு கொளள வேண்டும. தி.தி.தேவஸ்தானமேலாண்மைக் குழுவினுல் அவ்வப்போது விதிக்கப்படும நிபந்தனைகளின்படி, திருவுருவச்சிலேகள் அனுப்பி வைக்கப்படும். இது தொடர்பான எல்லா விவரங்களுக்கும் 'செயலாட்சித் தலேவர், தி. தி. தேவஸதானம், திருப்பதி - 517501' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலேவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# பொங்கல் திருநாள்

திரு கே எம். பாபுஜி,
திருப்பதி.

தமிழர்த் திருநாள், உழவர்ப் பெரு நாள் என்று கொண்டாடப்படும் தனிச் சிறப்பைப் பெற்ற ஒரே நாள் பொங்கல் பெருநாளாகும். நாட்டிற்கு அச்சாணியாக விளங்கும் உழவர் பெரு மக்களின் உழைப்பைப் போற்றுவதே இதன் கொள்கையாகும். ஆடிமுதல் மார்கழி மாதம் வரையில், நெற்பயிரிட உகந்த காலமாகும். உழவர்கள் பயரிட்டுச் சேர்த்த நெல்லை மார்கழியிறுதியில் வீட்டிற்குக் கொண்டுவருவர். அதைத் தம் சுற்றமும நட்பும் சூழ மனைவி மக்களுடன் மகிழ்சசியுடன் கொண டாடுவர். இதைப் பற்றிச் சிறிது காண்போம்.

போகி :

போகித் திருநாள் பொங்கல் விழா வின் தொடக்க நாளாகும். இதனைக் 'காப்புக் கட்டு' விழா என்றும் வழங்குவர். இந்நாள் தொடங்கு வதற்கு முன்பே மக்கள் வீட்டைத் தூய்மைப்படுத்தி, வெள்ளையடித்து வண்ணக்கோலமிட்டு அலங்கரிப்பார்கள். போகி என்பது இந்திரனுக்குள்ள ஒரு பெயர். இந்திரன் மழைக் கடவுள். எனவே இவன் அருளால் மழை பெய்து நலம் பெற வேண்டும் என்பதே இவ்விழாவின் நோக்கம். இவனுக்குப் பூசை செய்யாவிட்டால் கோபம் கொண்டு மழையைத் தராமல் பஞ்சம் ஏற்பட்டுவிடும் என்று மக்கள் அஞ்சி இவனுக்கு முதல் விழாவாகக் கொண்டாடினர்கள். மேலும் மழைக்காலம் மார்கழி மாதத்தோடு முடிவடைகிறது. எனவே இது மழைக்கு நன்றி கூறும் விழா என்றும் கொள்ளலாம். இவ்வாறு இந்திரனைக் கொண்டாடுவதால் இதனைப் போகி என்பர். மற்றொரு காரணம், இன்று வீட்டினில் உள்ள பயன்படாத பழையப் பொருள்களைத் தீயிலிட்டுப் போக்குவர். 'போக்கி' என்பது நாளடைவில் மருவி 'போகி' என்று அழைக்கப்படுகிறது. இன்று வேப்பிலை, பூளைப் பூ, அவிரைப்பூ முதலியவற்றை வீட்டு கூரைகளின் முன்புறத்தில் செருகி வைப்பர். ஏனென்றால் விழா முடியும் வரை எந்தத் தீங்கும் தமக்கு வராமல் இருக்க இவ்வாறு செய்வர். எனவே இதனைக் காப்புக் கட்டு விழா என்றும் அழைப்பர்.



போகியன்று விடியற் காலையில் எழுந்து பழைய பொருள்களைத் தீயிலிட்டு, 'போகியோ! போகி' என்று கூவிக் கொண்டே கொளுத்துவர். பிறகு (அனைவரும்) எண்ணெய்த் தேய்த்துக் குளிப்பர். அன்று பயறு வகைகளான மொச்சை, துவரை, காராமணி முதலியவற்றை வேக வைத்து அவற்றை நிலத்தின்மீது வைத்து வணங்குவர்.

பொங்கல் :

போகிக்கு அடுத்த நாள் விழா பொங்கல் விழாவாகும். இதன் சிறப்பு குறித்தே 'பெரும்' என்னும் அடைகொடுத்து 'பெரும் பொங்கல்' என அழைப்பர். வயல்களில் பயிர் நன்கு செழித்து வளரவும் மழை பெய்யவும சூரியனின் ஒளி இன்றியமையாதது. எனவே கதிரவனுக்கு நன்றி செலுத்தும் விழாவாக இப் பெரும் பொங்கல் விழா கொண்டாப் படுகின்றது. இன்று புத்தாடை அணிந்து புதுப்பானைகளுக்கு மஞ்சள் காப்பாகக் கட்டித் தம் உழைப்பால் கிடைத்த புத்தரசி, அத்துடன் ஏலம், முந்திரி, திராட்சை இவைகளை அதில் இட்டுப் பொங்கலிடுவர். பொங்க

விடும் பானை பொங்கி வரும்போது தன் மனைவி மக்களுடன்'பொங்கலோ பொங்கல்' என்று கூவி மகிழ்வர். பிறகு இதை சூரியனுக்குப் படைத்து வழிப்படுவர்.

இந்தச் சூரியன் வழிபடு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. ரிக்வேத காலத்திற்கும் முற்பட்டு இந்த வழி பாடு இருந்து வருகிறது. கி.மு. 2000 வருடத்தில் வாழ்ந்த ஆரியர்கள், சூரியனை (அக்னி, வருணன்) வழிப் பட்டனர். மந்திரங்களில் மகா சக்தி வாய்ந்ததாகக் கருதப்படும் 'காயத்ரீ' சூரியனுக்கு உகந்த மந்திரம். அசை யும் பொருள்கள் எல்லாவற்றிற்கும் சூரியன் உயிர் என்று வேதங்கள் கூறு கின்றன. சூரியன் கண்ணுல் காணக் கூடிய தெய்வமாக விளங்குகிறது. மேலும் பயிர்கள் செழித்து வளர பயன்படுகிறது. எனவேதான் அதற்கு ஒரு விழாவாகவே பொங்கல் கொண் டாடுகிருர்கள்.

**சங்கிராந்தி :**

ஆந்திரம் மற்றும் பிற மாநிலங் களிலும் இதனைச் சங்கராந்தி என்று கொண்டாடுவர். சூரியன் ஒரு ராசியைவிட்டு மற்ருெரு ராசிக்கு வந்து சேருவதை சங்கராந்தி, சங்கர மணம் என்று சொல்வர். தனுர் ராசியை விட்டு மகர ராசிக்கு சூரி யன் வந்து சேருவதால் 'மகர சங்க ராந்தி' எனப்படும்.

சங்கராந்தியன்று கடவுளுக்குச் சிறப்பான ஆராதனைகள் உற்சவங்கள் செய்ய வேண்டும் என்று 'பிருகு சங் கிதை' கூறுகின்றது. புராணங்களின் படி கண்ணன்கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து இந்திரன் ஏவிய பெரு மழையிலிருந்து மக்களைக் காத்த நாள் இது என்பர். மேலும் ஒரு மானிட ஆண்டு தேவர்களுக்கு ஒரு நாளுக்குச் சமம். இதன்படி இந் நாளே தேவர்களுடைய நாளின் பகற் காலத் தொடக்கமாகும். எனவே இந்நாள் பூசைக்குச் சிறந்த நாளா கும்.

**மாட்டுப் பொங்கல் :**

பொங்கலுக்கு மறுநாள் உழவுத் தொழுலுக்குப் பயன்பட்ட மாடு களுக்கு நன்றி செலுத்தப்படுகின்றது. இதையே 'மாட்டுப் பொங்கல்' என்று அழைப்பர். உழவன், நிலத்தை உழ ஆரம்பத்திதிலிருந்து அறுவடை செய்து மணிகளைப் பிரித்து அதனை வண்டியின் மூலம் வட்டிற்குக் கொண்டு செல்லுவரை அவனுக்குத் துணைப்புரிகிறது. இவ்வாறு தனக்கு உதவியாகயிருக்கும் எருதுகளுக்கு அன்றைய தினம் அவற்றின் கொம்பு களுக்கு வண்ணம் பூசி, பூக்களுடன் மஞ்சள் கிழங்கினை இணைத்துக்கட்டி மாலையினை இடுவர். மஞ்சள் குங்குமம் இட்டு அழகு செய்வர். அன்று மாட்டுப் பொங்கலிடுவர். அன்று மாடுகளை வேலை வாங்க மாட்டார் கள். மாலையில் எருதுகளை வண்டிகளிற் பூட்டிப் 'பொங்கலோ பொங்கல் மாட்டுப் பொங்கல்' என ஆரவாரித்து ஓட்டிக் கொண்டு ஊர் வலம் வருவார்கள்.

தமிழர்களின் வீர விளையாட்டு களில் ஒன்று 'ஜல்லிக்கட்டு'. இதற்கு 'மஞ்சு விரட்டு' என்றும் 'கொல்லேறு தழுவுதல்' என்றும் பெயர்கள் உண்டு. கொழுத்து வளர்ந்த காளையின் இரு கொம்புகளைப் பளபளவென்று சீவித் தைலம் தடவி அந்த கொம்புகளின் நுனியில் பணமுடிப்பை அல்லது பொருள் முடிப்போ கட்டி வைப் பார்கள்; இவற்றைக் காளை வயது வாலிபர்கள் தங்கள் உயிரைத் திரண மாக மதித்து அக்காளைகளை அடக்கிப் பொருள்களை எடுத்துக் கொள்வார் கள். இவ்விளையாட்டுப் பொழுது போக்கிற்காக நடத்தப்படுகிறது.

சங்க காலத்தில் முல்லை நிலத்தில் ஒரு வீட்டில் பெண் குழந்தை பிறந்த பின் அவ்இல்லத்திலுள்ள பசு ஒரு காளைக் கன்றினை ஈன்ருல், அக்கன்று அவளுக்காகவே வளர்க்கப்படும். அவள் வளர வளர கன்றும் காளை யாக வளரும். அவளுக்குத் திருமண வயது வந்ததும் காளையை அடக்கும் போட்டி நடத்தப்பெறும். இதில் எவ னெருவன் காளையை அடக்கி வெற்றி பெறுகிருனே, அவனுக்கு அக்கன்னி மாலை இடுவாள் என்ற வழக்கம் இருந்து வந்தது என்பதை முல்லைக் கலி 101ஆம் பாடல் மூலம் அறிய லாம்.

**காணும் பொங்கல :**

மாட்டுப் பொங்கலின் மறுநாள், காணும் பொங்கல். ஒருவரை யொருவர் கண்டு மகிழ்வர். சிறி யோர் பெரியோரை நாடிச்சென்று வணங்கி வாழ்த்துப் பெறும் நாள் இத்திருநாளாகும். இன்று தொழி லாளிகள் வேளாளர் வீடுகள்தோறும் சென்று வணங்கி 'இனும்' பெற்று வருவார்கள். இதனைக் 'கன்று பொங்கல்' என்றும் 'கன்னிப் பொங் கல்' என்றும் கூறுவர். சிற்றிளம் பெண்கள் கூட்டமாகக் கூடி கும்மி யடித்துத் தாங்கள் சேர்த்து வைத்த பொருள்களைக் கொண்டு ஆற்றங் கரைக்குச் சென்று கூட்டாஞ்சோறு ஆக்கி ஆற்றுக்குப் படைத்து பின்னர் சாப்பிட்டுவிட்டு வீடு திரும்புகின் றனர்.

தன் உழைப்பின் பயனைக் கொண்டு தான் மட்டும் மகிழாது தன் உற்றம், சுற்றம் கூடி மகிழ்ந்து கொண்டாடும் ஒரு சமுதாயக் கூட்டு விழாவாகப் பொங்கல் விளங்குகிறது. இந்நாளில் சூரியன் தென் திசையிலிருந்து வட திசை நோக்கி நகரும். சூரியன் புதிய திசை நோக்குவது போல், மனி தனும் பழையன கழித்து, புதிய வாழ்க்கை மேற்கொண்டு வாழ்வான்.



# கண்ணன் தந்த கண்ணாடி

அறிவுடைய மனிதன் தனது உண்மையான இயல்பினை இறைவனருளினால் உணர முடியும் என்ற கருத்து இங்கு 'கண்ணன் தந்த கண்ணாடி' என்னும் பொருளில் விளக்கப்படுகிறது.

தன்னில் படியும் பொருட்களின் உருவ அழகினைக் காட்டுவது பின் பக்கம் இரசம் பூசப்பட்ட கண்ணாடி. ஆனால் அது அப்பொருட்களைத் தன்னிடத்தே ஒட்டிக் கொள்ளாது. அதுபோல் ஆசார்யனருளால் உள்ளத்தில் பக்தி ரசம் பூசப்பட்டவன், தனது உண்மையான இயல்பினைக் காண்பான். பிறரையும் தன்னைப் போல் உள்ளம், உரை, செயல் ஆகிய மூன்றின் மூலம் உண்மையிலே அன்பு செலுத்துவான். அவனுடைய உள்ளம் என்னும் கண்ணாடியில் விருப்பு வெறுப்பு என்ற பற்றுக்கள் ஒட்டாது. தனக்கு ஏற்பட்ட தொழிலை இறைவனே அளித்ததாக நினைப்பான். இறைவனுடைய இன்பத்திற்காக அவனது தொழிலைச் செய்து அதன்மூலம் கிடைக்கும் பலனை இறைவனுக்கே அர்ப்பணிப்பான். மனத்தினைத் தன் வயப்படுத்துவதற்காக அவன் தொழிலில் ஈடுபடுவான். உடல் வேறு ஆத்மா வேறு என்ற நினைவின் முதிர்ச்சியில் உந்தப்பட்ட அவன், தொழிலிலீடுபடும் பொழுது உள்ளத்தை பகவந் நாம ஜபத்திலீடுபடுத்துவான். அவன் பெற்ற நலம் இறைவனருளால் பெற்ற மயர்வற்ற மதிநலமாகும். அந்நலத்தைப் பக்தியுடன் கூடிய ஞானம் என்கிறார் பட்டர். அந்நலத்தையே கண்ணாடி என்று குறிப்பிடுகிறாள் ஆண்டாள்.

மனிதனுடைய செயல் திறனே அவனது இயல்பினைக் (சொரூபத்தினை) காட்டும் - கண்ணாடியாகும். செருக்கற்றதும் இறைவனது கைங்கர்யத்திற்கு, மக்கள் தொண்டிற்கு, ஏற்றதுமான குடிப்பிறவியே ஆன்மாவைப் பிரதிபலிக்கச் செய்யும் கண்ணாடியாகும்.

ஆண்டாள் தன் தோழிகளுடன் நப்பின்னைப் பிராட்டியை நாடினாள். அவளைக் கிருஷ்ணனிடம் சிபார்சு செய்து அவன்மூலம் கண்ணாடி கிடைக்கச் செய்ய வேண்டுமென்றும், காலதாமதம் செய்யாமல் அவனே தனக்கும் தோழிகளுக்கும பக்தி நீராட்டம் செய்விக்க வேண்டுமென்றும் விண்ணப்பித்தாள்.

......தட்டொளியும் தந்து உன் மணாளனை
இப்போதே எம்மை நீராட்டு......
(திருப்பாவை 20)

தந்தையை நேரே அணுகுவதைக் காட்டிலும் தாய்மூலம் அணுகும் பொழுது செயல் எளிதில் முடியும். அம்முறையினையொட்டியே ஆண்டாள் கிருஷ்ணனை நேரே அணுகுவதைக் காட்டிலும் அவனே தனக்கு விரும்பி நாயகியாக்கிக் கொண்ட நப்பின்னைப் பிராட்டியின் சிபார்சுமூலம் அவனை அணுகினால், தான் மேற்கொண்ட செயல் எளிதில் முடியுமென்று எண்ணி அவளைப் பிரார்த்தித்தாள். கண்ணாடியும் பெற்றுக் கொண்டாள்.

திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன்,
புதுச்செந்நெல்குளம்.

பக்தி நீராட்டம் செய்வதன் நோக்கம்—மயர்வற மதிநலம் பெறுவதற்காகவே.

'மயர்வற்ற மதி நலம்' என்ற கண்ணாடியை ஆண்டாள் தன் முயற்சியின் மூலம் பெற முடியாதா? கிருஷ்ணனிடமிருந்துதான் பெற வேண்டுமா? விடை காண்போம்.

காட்டில் வேட்டையாடச் சென்ற பாண்டு மன்னன் தன் எதிரில் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு மான்கள் கூடிக் களித்திருப்பதைக் கண்டான். பரவசமாகி மயங்கினான்—விதியின் வசத்தால். கணையொன்றை ஏவினான்- ஆண் மான் பேரில். விழுந்த மான் எழுந்தது—இந்துமன் என்ற பெயர் கொண்ட முனிவன் வேடத்தில். 'நான் வேடம் மாறி மனைவியுடன் காம நலன் அனுபவித்துக் கொண்டிருந்த நேரத்தில், நீ கணை யேவி என்னை வீழ்த்தியமையால் நீயும் உன் மனைவியும் காமநலன் அனுபவிக்கும் பொழுது என்னைப் போல் இறந்து விடுவாய்', என்று சாபமிட்ட பின், முனிவன் வீழ்ந்து இறந்தான் மண்ணில்.

இப்பொழுது வழக்கம் போல் மிருகங்களை வேட்டையாடச் செல்லவில்லை பாண்டு மன்னன். காம நலனிலிருந்து விடுபட அவனது புலன்களை வேட்டையாடச் சென்றான். எதிரிகளுடன் போராடிக் கோபக் கனலை வளர்க்கச் செல்லவில்லை பாண்டு மன்னன். புலன்களை அவிக்கும் ஓமக் கனலை வளர்க்கச் சென்றான். நடந்தது என்ன?

குந்தி மாத்ரி ஆகிய மனைவிகளோடு ஓமக் கனல் வளர்த்து வரும் நாளில், கண்டான் மன்னன் வசந்த ருதுவின் விளைவுகளை. அவனது புலன்கள்

ஆடின-அந்த ஆட்டம் முற்றுப் பெற்றது—புன்னகை பொருந்திய மாத்ரியின் பொன்னென்றும் பொலிவிலே. ஓமக் கனலை ஒதுக்கினுன். அவளது அழகு என்ற நெய்யினைப் பருகினுன். அதனை உள்ளத்திலே சொரிந்தான். அங்கு அது காமக் கனலை ஓங்கி வளரச் செய்தது. அவளது விழிகளிலிருந்து புறப்பட்ட பாணங்கள் இந்துமன் என்ற முனிவரின் சாபத்தின்படி அவனது உயிரை வேட்டையாடி விட்டன. தன்னியல்பினை உணராத காரணத்தால் பாண்டு மன்னன் புலன்களால் வளர்க்கப்பட்ட காமக் கனலை பக்தி நீர் சொறிந்து அமர்த்த முடியவில்லை.

தவத்திற்குச் சென்றுதான அமர்ந்தார் விசுவாமித்திரர். மான் விழியாள் மேனகையின் அதரத்திலல்லவா அமர்ந்தது அவரது உள்ளம். காரணம் அவர் அவரது சொரூப அழகினைக் காணும் கண்ணுடியை இறைவனிடமிருந்து பெறவில்லை.

நன்கு துடைக்கப்பட்ட பளபளப்பான கண்ணுடியையும் விட்டுவிடாது புயற்காற்று. தூசிகளைக் கொண்டு வந்து கொட்டி அழுக்காக்கி விடும். அதுபோல் அறிவிலே தெளிவடைந்த பாண்டு மன்னன், விசுவாமித்திரர் ஆகியோரது தூய உள்ளங்களையும் விட்டு விடவில்லை—மாத்ரி, மேனகை ஆகியோரது விழிகளிலிருந்து வீசப்பட்ட காமப் புயற்காற்று. 'உடற்பற்று', என்ற தூசிகளைக் கொட்டி அழுக்காக்கி விட்டது. அவர்களது சுய அறிவினை முறித்துவிட்டது. இறைவனருளால் அவர்களது இயல்பினை அதாவது சொரூப அறிவினை அவர்கள் உணர இயலாமையே அதற்குக் காரணமாகும்.

'எப்படிக் கண்ணுடி, அழுக்கால் மறைக்கப்படுகிறதோ அப்படி சுய அறிவானது காமத்தால் மறைக்கப்பட்டிருக்கிறது', என்கிருன் கீதாசாரியன். (கீதை, அத்தியாயம் 3, சுலோகம் 38).

கண்ணுடியில் படிந்த அழுக்கை நீக்கினுலும் அது மீண்டும் படிந்து அதனுடைய பளபளப்பான தன்மையினை மறைத்து விடும். அதுபோல் புலனின்பங்களாலேற்படும் காமத்தை நீக்கிச் சுய அறிவிற செயல்பட்டாலும், அந்தக் காமமானது எதிர்பாராமல் புலன்களைத் தன் வயப்படுத்திச் சுய அறிவினை மறைத்து விடும். அதற்குப் பாண்டு மன்னனும் விசுவாமித்திரரும் உதாரண புருஷர்களாகத் திகழ்கிருர்கள்.

நிலைத்த மதியில் எந்நிலையிலும் மனிதன் சுய அறிவிற் செயல்பட அவனது முயற்சியால் முடியாது. இறைவனது பேரருள் அவனது உள்ளத்தில் சுரந்து கொண்டே யிருகக வேணடும். அதற்காகத்தான் ஆண்டாள் கிருஷ்ணனிடம் கண்ணுடி வேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

மாணவ மாணவிகள் பெற்ருேர்கள் வழங்கிய உடைகள் அணிந்து பள்ளி வந்தால் உடைகளின் நிறங்கள் வேறுபட்டிருக்கும். பள்ளியில் வழங்கிய உடைகள் அணிந்து வந்தால் நிறங்கள் வேறுபடாது. அவர்களது உள்ளங்களிலும் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படாது. அதுபோல் மானுட உள்ளங்கள் தங்கள் முயற்சியால் பெறும் அறிவு வேறுபட்டுச் செயல்படும். இறைவனை அடையும் மார்க்கத்திலும் பலனிலும் மாறுபட்டுச் செயல்படும். இறைவனே ஆசார்யனுக விருந்து மானுட இனத்திற்குச் சொரூப அறிவு ஒளியை வழங்கி விட்டால் இறைவனை அடையும மார்க்கத்திலும் பலனிலும் வேறுபடாது. காலதாமதமும் ஏற்படாது. அதனுல்தான் ஆண்டாள் கிருஷ்ணனே கண்ணுடி வழங்கி தன்னையும் தோழிகளேயும் கால தாமதம் செய்யாமல் பக்தி நீராட்டம் செய்விக்கவேண்டுமென்று பிரார்த்தித்தாள்.



# இறைவனின் நாமங்கள்!

இறைவன் ஒருவனே! ஒன்றே குலம். ஒருவனே தேவன்' என்கிறேம். ஆனல் அந்த இறைவனுக்கோ பலவிதமான நாமங்கள். உலகின் பல நாடுகளில் வழங்கும் பெயர்கள் என்னென்ன தெரியுமா?

1) அபிசீனியா நாட்டில்—இலியா
2) அயர்லாந்தில்—தியா
3) அரேபியாவில்—அல்லா
4) ஆர்மேனியாவில்—டிவுபி
5) இங்கிலாந்தில்—காட் (GOD)
6) இத்தாலியில்—தயோ
7) இந்தியாவில்—பகவான்
8) இஸ்ரேலில்—இலாஹா
9) ஈரானில்—ஸாயார்
10) எகிப்தில்—தியும்
11) கிரீசில்—தியஸ்
12) சீனவில்—க்லாஸா
13) டென்மார்க்கில்—காட்
14) தார்த்தாரில்—மா கான்
15) பர்மாவில்—பய்யா
16) பிரான்ஸில்—தியு
17) பெல்ஜியத்தில்—கெயிட்
18) போர்ச்சுகல்—தேயஸ்
19) போலந்தில்—பாக்
20) ஜப்பானில்—காய்ஸர்
21) ஜெர்மனியில்—டாயிட்
22) ஸ்விஸ்நாட்டில்—கட்
23) ஹாலந்தில்—கட்
24) தமிழகத்தில்—ஆண்டவன்

✱

தொகுத்தனுப்பியவர்:
திரு. ஏ. நாகராஜன்,
கடலூர்-1.

# 1988-ஆம் ஆண்டு ராசி பலன்கள்

திரு. பி. சுந்தரராமன் M.A. B Ed.,
பழமார்னேரி.

## மேஷம்

(அஸ்வினி, பரணி, கார்த்திகை 1-ஆம் பாதம்)

உடல்நிலை சீரடையும், சோம்பலும் சோர்வும் நீங்கி உற்சாகம் பிறக்கும். ஊக்கம் அதிகரிக்கும். வெளியூர், வெளிநாடு சென்றிருந்தவர்கள் தமது இருப்பிடத்திற்குத் திரும்ப இயலும். தொழிலில் ஏற்பட்ட தோல்வி அகலும். சுயதொழில் செய்பவர்கட்கு உற்பத்தி அதிகரிக்கும். வருவாயில் இருந்த தேக்க நிலை நீங்கும். கொடுத்தக் கடன் திரும்பும், குடும்பத்தில் ஏற்பட்ட கலகம், சர்ச்சை விலகி குதூகலமும் பரஸ்பர அன்பும் வளரும். மனைவியைப் பிரிந்து வாழ்ந்தவர், கணவரைப் பிரிந்து இருந்தவர்கள் ஒன்று சேரும் சூழ்நிலை உண்டாகும். பொதுச்சேவை புரிவோர்க்குச் சோதனைகள் உண்டாகும். புத்தக வெளியீட்டாளர் போனறோர் நல்ல வாய்ப்புக்களை இழக்க வேண்டி வரும். போட்டிப் பந்தயங்கள் தோல்வியைத் தரும். காவல், ராணுவம், மருத்துவம, விவசாயம், தோட்டக் கலைதொழில் புரிவோர் முன்னேற்றத்தை அடைவர். தாயாதியர் பகை, அடுத்த வீட்டுக்காரர் சச்சரவு போன்ற வகையில் வீண் வம்பு ஏற்படும். பெண்களுக்கு இது நல்ல ஆண்டு. பிரிந்தவர்கள் சேரலாம. திருமணம் கூடி வரும். புத்திர பாக்யம் உண்டாகும். சிலருக்குக் கர்ப்பச் சிதைவு ஏற்பட வாய்ப்பு உண்டு. எனவே கவனம் தேவை என்பதை உணரவும். மாணவர்கட்கு இது அனுகூலமான ஆண்டாகும். விவசாயிகளுக்குத் தண்ணீர் தட்டுப்பாடு, பூச்சிகள் போன்றவற்றால் சேதம் உண்டானலும் ஆதாயம் அதிகரிக்கும். கரும்பு, வெற்றிலை, கிழங்கு, மஞ்சள் பயிரிடுவோர் அதிக லாபம் அடைவர். விளையாட்டு வீரர்களுக்கு வாய்ப்புகள் குறையும். பொதுவாக இந்த ராசிக்காரர்களுக்கு இது நல்ல ஆணடு என்றே கொள்ளலாம்.

## ரிஷபம்

(கார்த்திகை 2, 3, 4 பாதங்கள், ரோகிணி, மிருக சீர்ஷம 1, 2 பாதங்கள்)

வீடு, நிலம், வாகன வகையில் ஏற்பட்டிருந்த பிற்போக்கான நிலை அகலும். புதியதாக வீடு, மனை போனறவற்றை வாங்கும் வாய்ப்பேற்படும். கூட்டு வாணிகத்தில் இருந்த குறை அகலும். வயது மிகுந்தவர்களின் உடல்நிலை பாதிக்கும். பலர் படுக்கையில் விழ வேணடிய சூழ்நிலை உருவாகும். குடும்பத்தில் மகிழ்ச்சியும், பணப்புழக்கத்தில் மனத்திருப்தியும் இருந்தாலும்பற்றுக்குறைத் துயரைத் தரவே செய்யும். பிறருடன் கடுமையான வாக்குவாதம், சச்சரவு, அதிகாரிகளின் அசசுறுத்தல், வேலைப்பளு, இடமாற்றம், சிறைவாசத்திற்கு நிகரான சித்திரவதை போன்றவற்றை அனுபவிக்க நேரிடும். பெரும்பாலான வாகளுக்குக குடியிருப்போரோடும் குத்தகைதாரரோடும வீண விரோதம் ஏற்படும. ஜாமீன் கையெழுத்துப் போட்டு மாட்டிக் கொள்ள வேணடாம். பெண்களைப் பொறுத்தவரை இவ்வாண்டு அவ்வளவு நல்லதாக சொலல முடியாது. கணவரைப் பிரிதல, கூட்டுக் குடும்பத்தில் சச்சரவு போன்றவை ஏற்படும். மாணவர்கள் கடின உழைப்பினலேயே உயர் மதிப்பெண் அடைய முடியும். உயர் மட்ட பதவி வகிக்கும் அதிகாரிகள் பெரிதும் பாதிக்கப்படுவர். விவசாயிகள் சிலவு அதிகம் செய்தாலும் ஆதாயம் அதிகம் பெறுவர். சவுக்கு, மூங்கில், யூகிலிப்டஸ் மரம் வளர்ப்பவர்கள் அதிக லாபம் அடைவர். இந்த ராசிக்காரர்களுக்கு இது சுமாரான ஆண்டாகும்.

## மிதுனம்

(மிருக சீர்ஷம் 3, 4 பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள் முடிய)

உத்தியோகஸ்தர்களைப் பொறுத்தவரை முதல் ஆறு மாதம் ஓரளவு சுமுகமான நிலை இருந்தாலும் அதன் பின் இடமாற்றம், அதிகாரிகளின் அச்சுறுத்தல், போராட்டம், கதவடைப்பு போன்ற வேதனைக்குப் பலர் ஆளாகக்கூடும். மனைவியோடு கருத்து வேறுபாடு, கூட்டு வாணிபத்தில் சிக்கல், உத்தியோக உயர்வில் பாதிப்பு, கடன் சுமை, அபகீர்த்தி, கவலை, வீண செலவு போனறவற்றல் மனம் வருத்தமடையும். பெண்களுக்குக் கணவரைப் பிரிந்து வாழவும், கூட்டுக் குடும்பத்தில் சச்சரவும் ஏற்படும். பிறரோடு பழகுவதில் எச்சரிக்கை தேவை. குறிப்பாக உத்தியோகம் செய்வோர் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்வது அவசியம். வீடு, நிலம், விவசாய வழி இழப்பு, கால்நடைகளால் துயரம், நெருங்கிய உறவினர் பகை, வாகன இழப்பு, நண்பர்களின் நயவஞ்சகம், மனைவியோடு கருத்து வேறுபாடு, அரசாலும், ஆளும் கட்சியாலும் அல்லல், தண்டனை, கோயில் திருப்பணி ஈடுபாட்டால் அபகீர்த்தி போன்றவை ஏற்படும். குடும்பத்தில் சுப விரயங்கள் ஏற்படும். வெளியூர் வெளிநாடு பயணம் போன்ற வகையிலும் உபரி சிலவாகும். மனைவி நிமித்தம் பொருள் சேதம், ஆடை, அணி

# பெரியவாச்சான்பிள்ளையின் பெருமை

சோழ மண்டலத்தில் திருச்சங்க நல்லூர் எனனும் த்லத்தில் பக வான் கிருஷ்ணனுடைய திருநக்ஷத்திரத்தன்று - ஆவணி மாதம் க்ருஷ்ணஷ்டமி ரோகிணி-பெரிய வாச்சான்பிள்ளை அவதாரம் செய்தாா. இவருடைய வேறு திருநாமங்கள்; ஸ்ரீமத் கிருஷ்ணர், அபயப்ரத ராஜர். இவரது ஆசார்யர் திருநாமம்: நம்பிள்ளை. திருவாராதன தெய்வம் ஸ்ரீ கிருஷ்ணன். ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் அனைத்துக்கும் இவர் உரை செய்தருளினர். ஸ்ரீ ராமாயணத்தின் முக்கியமான சுலோ கங்கள், ஸ்தோத்ர ரத்னம் இவைகளுக்கும் உரை வழங்கியருளினர். எனவே இவரை வியாக்கியான சக்கரவர்த்தி என்று வைஷ்ணவ உலகம் போறறிக் கொண்டாடுகிறது. இவர் உரையிலிருந்து இவர் பல துறை களில் ஒப்புயர்வற்ற புலமை பெற்றிருந்தார் என்பதை எளிதில அறிய லாம். எம்பெருமானுர் தரிசனத்துக்கு விளக்கமாக இவர் அருளிய சில ரகஸ்ய நூல்கள், பின்வந்த ஸ்ரீவசன பூஷணம், தத்வத்ரயம் முதலிய மற்றைய ஆசிரியர்களின் நூல்களுக்குச் சிறந்த முன்னேடிகளாயமைந் தன. இவருடைய பெருமைக்குச் சான்ருக ஒரு கர்ண பரம்பரைச் செய்தி வழங்கி வருகிறது. ஒரு சமயம் ஸ்ரீராமாயணத்திற்கு உரை எழுத வேண்டிச் சிலர் மஹா மேதையான அப்பைய தீக்ஷிதரை அணுகிய போது 'சோழியன் உமிழ்ந்த சக்கைதான் இருக்கிறது' என்று அவர் பதில் கூறினராம்.ஆம், பெரியவாச்சான்பிள்ளையின் பெருமைக்கு ஈடு ஏது? இணையேது.

—ஆர். சுப்பாராவ்-திருககோவலூர்.

ஆபரண இழப்பு ஏற்படும். இளைய சகோதரர்களால் பொருள் இழப்பு ஏற்படக் கூடும் பாகப் பிரிவினை யால் பகை ஏற்படும். வியாபாரி களுக்கு வியாபார விரிவாக்கம் பொது வாக தடைபடும். வாணிகம் பொது வாக நஷ்டத்தையே கொடுக்கும்.

## கடகம்

(புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம, ஆயில்யம்)

புத்திர, புத்திரிகளோடு கொண் டிருந்த விகல்பம் விலகும். அரசாலும், ஆளும் கட்சியாளும் ஏற்பட்ட இன் னல் விலகும். குழப்பு சிந்தனை, கோபம் குறையும். வருவாய் வீழ்ச்சி சீராகும். வம்பு, வழக்குகளுக்கு முடிவு ஏற்படும். குடும்பத்தை வெறுத்துத் தனித்து வாழ்ந்தவர், உத்தியோக நிமித்தம் குடும்பத்தைப் பிரிந்தவர் குடும்பத்தோடு கூடி வாழ இயலும். குத்தகைதாரரை வெளி யேற்ற இயலும். விவாகரத்து வழக்கு கள் அனுகூலமாக முடியும். ஆடை, அணி சோக்கை, உயர்மட்ட அதி காரப் பதவி போன்றவை ஏற்படும். பாரிசவாயு, இடுப்புப் பிடிப்பு,தோல் சம்பந்தப்பட்ட பிணி, நரம்புத் தளர்ச்சி போன்றவை ஏற்படும். நீர் வழங்குத துறை, வடிவால் வாரியம், ஜவுளி சம்பந்தபபட்ட தொழில், தாதுப் பொருள், உலோகத் துறை போன்றவற்றில் உள்ளவர்கள் நல்ல பலன் அடைவார்கள். புததிர பாக் கியம் சித்திக்கும். மாங்கல்ய பலன் மிகும். ஆராய்ச்சி மாணவர்களுக்குப் பரிசும் பட்டயமும் கிட்டும். வேலை யில் இருப்பவர்களுக்கு இலாகா மாற் றம் ஏற்படலாம். அலுவலகத் தொடர்புடைய தேர்வுகளில் வெற் றியும் கிட்டும். சகோதரர் ஆதரவு, நன்மை, வாகனங்கள் புதுப்பித்தல், தந்தையோடு சுமூக சூழ்நிலை உரு வாகும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம் முடிய)

பழுதடைந்த வாகனங்கள் இயங்கத் துவங்கும். விவசாயத்தில் புதிய அபி விருத்தி காணலாம். புதியதாக வீடு வாகனம் வாங்கும் வாய்ப்பு உண் டாகும். எதிர்பார்த்திருநத கோர்ட்டுத் தீர்ப்புகள் சாதகமாக அமையும். பலர் புதிய வகைத் தொழிலில் ஈடுபட வேண்டிய நிர்ப் பந்தம் நிலவும். இளைய தாரத்தோடு சச்சரவு, எடுத்த காரியத்தில் தடை, நணபர்களால் தீமை, துர்ப்போதனை களால் கூட்டு வாணிகததில் சிக்கல் போன்றவை உணடாகும். புத்தக வெளியீடு, சங்கீதத் துறையில் மேன்மை, புகழ் போன்றவை உண் டாகும். பெரும்பாலானவர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படும். எண்ணெய், இரும்பு, மரம வாணிகம் போன்ருேர் நற்பயனை அடைவார்கள், பெண்களுக்கு உடல் நலக்குறைவு ஏற்படும், போக்குவரத் தில் துன்பமும், துயரமும் உண்டா கும். மாணவர்கள் தாங்கள் துண் டித்தக் கல்வியைத் தொடரலாம். ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். தேர்வுகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிட்டும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற் றம், வேலை நீக்கம் முதலியவை ஏற் படும். வியாபாரிகள் புதிய வகை வணிகத்துவக்கத்தில் லாபம் அடை வர். ஆடை, அணி அலங்காரப் பொருள் தொடர்புத் தொழில் புரி வோர் பிற்பகுதியில் ஆதாயம் அடையக்கூடும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4 பாதங்கள், ஹஸ் தம், சித்திரை, 1, 2 பாதங்கள் முடிய)

இளைய சகோதரர்களோடு ஏற் பட்ட பகைமை உணர்ச்சி மறையும்,

பணியாளர்களின் ஒத்துழைப்பு உயர் வைத் தரும். செய்தி, பத்திரிகை, அஞ்சலகம், விண்வெளித் தொடர்புடையவர்களுக்கு ஏற்பட்ட தடங்கல் விலகும்.தாய், தந்தையைப் பிரிந்தவர்கள் ஒன்று சேர்வார்கள்.கட்டத் துவங்கிய கட்டிடம் பாதியில் நின்று போகும். விவசாயத்தில் ஆதாயம் இராது. வாயு சம்பந்தப்பட்ட நோய்கள், மார்புவலி, இருதயக் கோளாறு, நரம்புத் தளர்ச்சி போன்றவை ஏற்படும். தொழில் வழி இடமாற்றம், இலாகா மாற்றம் பலரைத் துன்புறுத்தும். தாய், தந்தை உடல்நலம் பாதிக்கப்படும். மனைவியோடு கருத்து வேறுபாடு ஏற்படும். பிறந்த வீட்டின் ஆதரவின்மையும், கூட்டுக் குடும்பத்தில் பிளவும் ஏற்படும். இருந்தும் அடகுக்குப் போன நகைகள் திரும்பும்,ஆடை, ஆபரண சேர்க்கை ஏற்படும்.மாணவர்கட்குக் கல்வியில் முடக்கம் ஏற்படும்.இவ்வாண்டின் ஆரம்பத்தில் எழுதும் தேர்வில் மட்டுமே வெற்றி பெற வாய்ப்புண்டு. உத்தியோகத்தில் இருப்பவர்கள் இடம் மாற்றம், இலாகா மாற்றம், அதிகாரிகளின் அச்சுறுத்தல் போன்றவற்றால் பாதிக்கப்படுவர். இவ்வாண்டு இவர்களுக்கு அல்லல் தரும் ஆண்டாகும். பூர்வீக சொத்தில் வில்லங்கம் ஏற்படும். குடும்பத்தில் பாகப்பிரிவினை, தொழிலில் துயரம், எதிர்கட்சி அரசியல் வாதிகளுக்குச் சிறைதண்டனை போன்றவை உண்டாகும்.

## துலாம்

(சித்திரை 3, 4 பாதங்கள், ஸ்வாதி, விசாகம் 1, 2, 3 பாதங்கள் முடிய)

இவ்வாண்டு இந்த ராசிக்காரர்களுக்கு மிகவும் நல்ல பலன்களையே கொடுக்கும். குடும்பத்தில் இருந்த சச்சரவு விலகும். உற்சாகம் உண்டாகும்.குடும்பத்தைத் துறந்து சென்றவர் குடும்பத்தோடு இணைவர்.புதியதாக வீடு, நிலம், வாகனம் வாங்க வாய்ப்புக்கிட்டும்.விவசாய உற்பத்தி பெருகும். நோயால் நொடிந்தவர் எழுந்து நடமாட இயலும். களவு போன பொருட்கள் மீண்டும் கிடைக்கும். எடுத்த காரியங்களில் இனி வெற்றியே உண்டாகும். வழக்குகள் வெற்றி பெறும். போட்டிப் பந்தயங்களில் புகழ் கிட்டும். சுப நிகழ்ச்சிகள் நடைபெறும். இருந்தும், இவ்வாண்டின் கடைசி பகுதி சுமாரான பலன்களையே தரும். பால் வளம், பண்ணை, தானியம், காய்கறி, பழவகை முதலியவற்றால் தொழிலாளிகள் லாபம் அடைவர். சினிமா, சங்கீத தொடர்புடையோர் அதிக ஆதாயம் காண முடியாது. பெண்களுக்கு ஆடை, அணி சேர்க்கை ஏற்படும். தைரியமும், தன்னம்பிக்கையும் ஏற்படும். மாணவர்கள் நன்கு தேர்ச்சி அடைவர்.சிலா அரசுவழி உபகார சம்பளமும் பெறுவர். உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு, சம்பள உயர்வு அதிகாரிகளின் ஆதரவு கிட்டும். விவசாயிகள் நல்ல பலனை அடைவார்கள். கட்டிட காண்ட்ராக்டர்களுக்கு இது பொற்காலமாகும்.மூத்த சகோதரர்களால் உதவி, அரசாங்க ஆதரவு, தந்தை வழி சொத்து சுகத்தால் மேன்மை, அதிகாரிகளின் அபிமானம் போன்ற பல வகையான நன்மைகளை இவர்கள் இவ்வாண்டில் அடைவர்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ஆம் பாதம், அனுஷம், கேட்டை, நக்ஷத்திரம் முடிய)

சோம்பலும் சோர்வும் அகலும், சஞ்சலம் அகலும். எழுத்துத்துறை, சங்கீதத் துறையில் இருப்பவர் மேன்மை அடைவர். மனைவியோடு இருந்து வந்த கருத்து வேறுபாடு அகலும். எதிர்பாராத பணவரவு கிட்டும். முயற்சியில் வெற்றி, வேலை வாய்ப்பு, கல்வியில் முன்னேற்றம், உல்லாச வாழ்வு போன்றவை ஏற்படும். ராணுவம், நீதி நிர்வாகம், இரசாயனத்துறை போன்றவற்றில் உள்ளவர்கள் நல்ல பலனடைவர். பெண்களுக்குத் திருமணம் கூடிவரும். வேலையில் இருப்பவர்களுக்கு இதுவரை இருந்து வந்த அதிகாரிகளால் தொல்லை நீங்கும். புத்திர பாக்யம் உண்டாகும். குடும்பத்தின் விரிசல் அகலும். வீண் பழிக்கு ஆளாகுவர். ஆகவே எச்சரிக்கை தேவை. மாணவர்களின் கல்வியின் முன்னேற்றம் தடைபடும். இருந்தும் தீவிர முயற்சி செய்தால் வெற்றி கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம், இலாகா மாற்றம் போன்றவை ஏற்படும். அரசுவழி, நிறுவனவழி வீடு அல்லது வீட்டு மனை ஒதுக்கீடு பெற இயலும். விவசாயிகளுக்கு இது சுமாரான ஆண்டாகும். பூர்வீகச் சொத்தால் ஆதாயம் கிட்டும். மூத்த சகோதரர்களோடு சச்சரவு ஏற்படும். வயது முதிர்ந்தவர் தமது ஆரோக்கியத்தில் கவனமாக இருத்தல் வேண்டும். ஒரு சிலர் புதிய தொழில் துவங்கக்கூடும். இந்த ராசிக்காரர்களுக்கு இது சுமாரான பலன்களையே தரும் ஆண்டாகும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம், 1-ஆம் பாதம் முடிய).

வரவிற்குமேல் இதுவரை இருந்து வந்த செலவு குறையும். தந்தையோடும், மற்றவர்களோடு இருந்து வந்த கருத்து வேறுபாடு அகலும். புதியதாக வீடு, வாகனம், விவசாய விருத்தி, கால்நடைமூலம் லாபம், தெய்வத் தொண்டால் நற்புகழ் போன்றவை ஏற்படும். திருமண முயற்சி ஏற்படும். இருந்தும் இவ்வாண்டின் பிற்பகுதியில் வேலை பளு, பதவி குறைப்பு, அதிகாரிகளின் களின் கொடுமை, வேலை இழப்பு, கடன் சுமை, பூர்வீகச் சொத்தில் வில்லங்கம், செலவு கூடும். பெரும் பாலோர் காரண காரியமின்றி அலைந்து கொண்டே இருப்பார்கள். இரும்பு, எண்ணெய், வணிகர்களுக்கு இந்த ஆண்டு ஓரளவு பிரதியனுகூலமான பலன்களைத் தரும். பெண்களுக்குக் கணவனின் அன்பும் ஆதரவும் குறையாது. சிறுசிறு சலசலப்பு இருந்துவரும். சுப நிகழ்ச்சிகள் நடைபெறும். உத்தியோகத்தில்

இருப்பவர்கள் உடன் பணிபுரிபவர்களின் பேச்சுக்களுக்குச் செவி சாய்ப்பது ஆபத்தை தரும். அணி, ஆடை பாதுகாப்பதில் அக்கறைத் தேவை. மாணவர்களுக்குத் கல்வியில் நாட்டம் குறையும், குறைந்த மதிப்பெண்களே பெறுவர். உத்தியோகத்தில் இருப்பவர்கள் அதிகாரிகளின் மூலம் பல சலுகைகளைப் பெறுவார்கள். இருந்தும் உடன் பணிபுரிகளிடம் எச்சரிக்கை தேவை.விவசாயிகள்,தண்ணீர் தட்டுப்பாடு, விளைச்சல்தேசம், பூச்சியரிப்பு போன்றவற்றால் மிகுந்த நஷ்டமடைவார்கள். அரசின் அச்சுறுத்தல், தந்தையோடு கருத்துவேறுபாடு போன்றவை ஏற்படும்.

## மகரம்

(உத்திராடம் 2,3,4, பாதங்கள், திருவோணம், அவிட்டம 1, 2 பாதங்கள் முடிய).

இதுவரை மூத்தசகோதரர்களோடு இருந்து வந்த கருத்து வேறுபாடு அகலும். தன்னம்பிக்கையும் தைரியமும் ஏற்படும். அரசாலும், ஆளும் கட்சியாலும் அனுகூலம் கிட்டும். புது முயற்சிகளில் எளிதாக நன்மை கிட்டும். அடுத்த ஆண்டு மத்தியில் கடன் சுமை அதிகரிக்கும். குடும்பத்தில் கலகம், சச்சரவு ஏற்படும். கூட்டுக் குடும்பம் பிரிய நேரிடும். எதிர்பாராத வகையில் வம்பு வழக்குகள் வந்து வாய்க்கும். வாகனம், வீடு ஆகியவற்றால் பணம் விரயமாகும். தாயார் உடல்நிலை பாதிக்கப்படும். இருந்தும் வேலை வாய்ப்பு மிகும். கடன் சுமை இவ்வாண்டின் பிற்பகுதியில் குறையும். திரவப் பொருள் வணிகம், ராணுவம், காவல் துறை, ரசாயணம், உலோக சம்பந்தப்பட்ட தொழில் புரிவோர்க்கு இவ்வாண்டு சுமாரான பலன்களையே தரும். பெண்களுக்கு இவ்வாண்டு பல கெடுதல்களையே தரும். அதிகாரிகளின் பகை, குடும்பத்தில் சச்சரவு போன்றவை உண்டாகும். மாணவர்கள் தேர்வில் வெற்றி பெற அதிக முயற்சி தேவை. பலருக்குக் கல்வியில் முடக்கம் உண்டாகும். வியாபாரிகள் இவ்வாண்டில் கொள்முதலை அதிகப்படுத்தலாம். எதிர் காலத்தில் லாபமடைவார்.விவசாயிகள் நவீன முறையில் விவசாயம் செய்தால் லாபம் ஈட்டலாம். தூர தேசப் பயணத்தால் இந்த ராசிக்காரர்கள் பொன் பொருளை இழப்பார்கள்.அரசால் தொல்லை ஏற்படும். சிலர் தெய்வ நிந்தனைக்கு ஆளாவார்கள். உபரி சிலவுவால் இன்னலை அடைவார்கள். எந்தக் காரியத்திலும் எச்சரிக்கை தேவை.

## கும்பம்

(அவிட்டம் 3, 4 பாதங்கள், சதையம, பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள் முடிய)

தொழிலில் ஏற்பட்ட தொல்லைகள் அகலும். முறையான பதவி உயர்வு கிட்டும். உழைப்பிற்கேற்ற ஊதியம் கிடைக்கும். தைரியமும், தன்னம்பிக்கையும் மிகும். பாதியில் நின்றிருந்த கட்டிடம் முழுமை அடையும். ஆண்டின் முற்பகுதியில் வீடு, நிலம், விவசாயம், கால்நடை போன்றவற்றில் ஆதாயம் மிகும். வங்கியில் கணிசமாக சேமிப்பு சேரும். திருமணம் கூடிவரும், புத்திர பாக்கியம் கிடைக்க வழியுண்டு. சமுதாயத்தில் அந்தஸ்து மிகும். ஆணடின் பிற்பகுதியில் குடும்பத்தில் சிக்கல், வாகனங்கள் பழுதடைதல், வீடு கட்டும் திட்டத்தில் தடை, சகோதரர்களோடு கருத்து வேறுபாடு போன்றவை ஏற்படும். சாட்சி, ஜாமீன கையெழுத்து போன்றவற்றைத் தவிர்க்கவும். நிலக்கரி, பொதுஜனத் தொடர்பு, எண்ணெய், இரும்பு போன்ற தொடர்புடைய தொழில் புரிவோர் மேன்மையான பலன்களை அடைவர். விளையாட்டு, சிறைச்சாலை, தீயணைப்பு, பாதுகாப்பு போன்ற துறைகளில் இருப்போர் மிகுந்த யோகத்தை அடைவர். பெண்களுக்குத் திருமணம், புத்திர பாக்யம் ஏற்படும். உத்தியோகம் செய்யும் மாதர்க்குப் பொதுவாக அனுகூலப் பலன்களே கிட்டும். மாணவர்களுக்குப் பொதுவாக கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வேலையில் இருப்பவர்கள் நல்ல பலன்களை அடைவர். கூட்டு வணிகத்தாலும், நண்பர் உறவினராலும் மனமகிழ்ச்சி ஏற்படும்.

## மீனம்

(புரட்டாதி 4-ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி முடிய).

தந்தையுடன் ஏற்பட்ட மன வேறுபாடு விலகும். தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும். நோய்கள் நீங்கி குணம் ஏற்படும். உத்தியோகத்தில இருப்பவர்கள் இடமாற்றம், இலாகாமாற்றம் மூலம் இன்னலை அடைவர். பூர்வீகச் சொத்தில் வில்லங்கம் ஏற்படும். எதிர்பாராத வீண் சிலவு உண்டாகும். ஆண்டின் முதல் பகுதியில் வருவாய் பெருகும். வழக்குகள் முடிவுபெறும். உத்தியோகத்தில் சம்பளம் உயரும். குடும்பத்தோடு ஒன்று சேருவார்கள். ஆண்டு பிற்பகுதியில் சுமாரான பலன்களே கிடைக்கும். தொழிலில் பெரிய அளவு முன்னேற்றம் ஏற்படாவிட்டாலும் புதிய பிரச்னைகள் இராது. இக்காலத்தில் திருமணம் கூடுவது கடினமாகும். இரும்பு, எண்ணெய் வாணிகத்தில் ஈடுபட்டுள்ளோர் ஆண்டின் பிற்பகுதியில் கவனமாக இருத்தல் அவசியம். பெண்கள் கணவரோடு ஒத்துபோவதே நல்லது. சுயமாக செயல்பட இயலாத நிர்ப்பந்த சூழ்நிலை பலருக்கு ஏற்படும். மாணவர்கள் முற்பகுதியில் நல்ல பலன்களை அடைவார்கள்.கல்வியைத் துண்டிக்க வேண்டிய சந்தர்ப்பங்கள் ஆண்டின் கடைசிப் பகுதியில் ஏற்படும். ஆகவே மிகவும் எச்சரிக்கை தேவை. உத்தியோகஸ்தர்கள இலாகா மாற்றம், இடமாற்றம் போன்றவற்றால் பாதிக்கப்படுவார்கள். வியாபாரிகளுக்கு இவ்வாண்டு சுமாரான பலன்களையே தரும்.விவசாயிகள் அதிக சிலவு செய்ய நேரிடும். மொத்தத்தில் இந்த ராசிக்காரர்களுக்கு ஆண்டு முற்பகுதியில் நல்ல பலன்களையும், பிற்பகுதியில் சுமாரான பலன்களையும் கொடுக்கும்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

